ஸ்ரீ:

# திவ்யப் பிரபந்தம்

# இயற்பா

பதிப்பாசிரியக் குழுவினரால்
பல பிரதிகளை ஒப்புநோக்கிப் பரிசோதித்து
வெளியிடப்பட்டது

வெளியிடுவோர்
எஸ். ராஜம்
5, தம்புச் செட்டித் தெரு
சென்னை-1

முதற் பதிப்பு — 1956



விலை ரூபாய் ஒன்று
(தபால் செலவு தனி)

கிடைக்கும் இடம்
மர்ரே அண்டு கம்பெனி
5, தம்புச் செட்டித் தெரு
சென்னை-1

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை—14

ஸ்ரீ:

# இயற்பா

## பதிப்புரை

திவ்யப் பிரபந்தங்களை அடைவுபடுத்தி, 'இசைப்பா', 'இயற்பா' என வகுத்தருளியவர் ஸ்ரீமந் நாதமுனிகள் ஆவர். முதலாயிரம், பெரிய திருமொழி, திருவாய்மொழி, மூன்றும் இசைப்பாக்கள் அடங்கிய தொகுதிகள். இயற்பாவில் அடங்கிய பிரபந்தங்களை 'சப்த ரஸப் பிரதானமாகையாலே' இயற்பா என்று வகுத்ததாகக் கோயிலொழுகு கூறுகிறது. கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் அமைந்த 'திருவிருத்தம்', 'இராமாநுச நூற்றந்தாதி' ஆகியவை இசைக்குச் சேருமாயினும், இயற்பா என்றே பெயர் பெறுகின்றன.

ஸ்ரீமந் நாதமுனிகள் தாம் ஏற்படுத்தின திருமொழி—திருவாய்மொழித் திருநாளிலே முதலாயிரத்தையும், பெரிய திருமொழியையும், திருவாய்மொழியையும், தேவகானத்திலே ஏறிட்டுச் சேவித்தார் என்றும், இயற்பாவை இயலாகச் சேவித்தார் என்றும், வரும் கோயிலொழுகுச் செய்தி இசைப்பா, இயற்பா, என்னும் பாகுபாட்டைத் தெளிவாகத் தெரிவிக்கிறது.

இசைப்பாத் தொகுதிகளுக்குப் பண், தாளங்கள் அமைந்திருத்தலும் கவனிக்கத்தக்கது. திருவாய்மொழிப் பாசுரங்கள் முழுமைக்கும் பண், தாளங்கள் உள்ளன. 'பண் ஆர் பாடல் இன் கவிகள்' (3961) என்று திருவாய்மொழியில் ஸ்ரீ சடகோபரே அருளிச் செய்துள்ளார். இவரது சீடரான மதுரகவிகள்,

'தேவு மற்று அறியேன் ; குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவனே' (938)

என்று அருளிச் செய்வதும் காண்க. பெரிய திருமொழிக்கும் பண், தாளங்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஏட்டில் காணப்படுகின்றன. 'இன் இசையால் சொன்ன செஞ்சொல் மாலை' (1127, 1767), 'பண் ஆர் பாடல்' (1037), 'பண்ணுள் ஆர்தரப் பாடிய பாடல்' (1267), 'பண்கள் அகம் பயின்ற சீர்ப் பாடல்' (1537) முதலியனவாக வரும் பெரிய திருமொழிப் பகுதிகள் இத் தொகுதியும் இசைப்பா

என்பதைத் தெளிவிக்கின்றன. இங்ஙனமே முதலாயிரத்திற்கும் பண், தாள அமைப்புக்கள் முன்பு வழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். பெரியாழ்வார் பாசுரங்கள் பண்ணில் இயன்றவை என்பதை ஸ்ரீ வேதாந்த தேசிகன் தமது 'பிரபந்த சாரத்'தில் (15) 'பட்ட நாதன் பண் இயல் நானூற்றேழு பத்து மூன்றும்' என்று குறிப்பிடுகின்றார். திருமழிசைப் பிரான் அருளிய இரண்டு பிரபந்தங்களில், 'திருச்சந்தவிருத்தத்'தை முதலாயிரத்திலும், 'நான்காம் திருவந்தாதி'யை இயற்பாவிலும் சேர்த்து முறைப்படுத்தியுள்ளமையை நோக்கினாலும், முதலாயிரத் தொகுதியிலுள்ள பிரபந்தங்கள் அனைத்தும் இசைப்பாக்களே எனத் துணிய இயலும். எனவே, இயற்பா ஒழிந்த ஏனைய மூன்று தொகுதிகளும் இசைப்பாத் தொகுதிகள் என்பது தெளிவு.*

திவ்யப் பிரபந்தம் இருபத்து நான்கில் இயற்பாப் பிரபந்தங்கள் பதினொன்று. இவற்றுள் இறுதியாக அமைந்துள்ள 'இராமாநுச நூற்றந்தாதி' ஸ்ரீ ராமாநுஜர் காலத்தில் இயற்பாவுடன் சேர்க்கப்பட்டது. இச் செய்தியைத் தெரிவிக்கும் கோயிலொழுகுப் பகுதி பின்வருமாறு :

> இப்படி உடையவர் திட்டம் செய்தருளின அநந்தரம், சில நாளைக்குப் பின்பு, திருவரங்கத்தமுதனார், எம்பெருமானார் விஷயமாக காயத்ரீ ஜப ஸங்க்யையாலே கலித்துறை நூற்றந்தாதியை விண்ணப்பம் செய்ய; பெருமாள், ஒரு ஸப்தாவரணத் திருநாளிலே, உடையவரைத் தம்முடனே கூட வரவேண்டாம் என்று நியமித்தருளி, திருவீதியிலே ஸகல வாத்யங்களையும் நிறுத்தி, ஸ்ரீ வைஷ்ணவர்கள் அநுஸந்திக்கக் கேட்டருளி, போர உகந்தருளினார்; அது முதலாக, பெருமாள் நியமனத்தினாலே, பெரிய ஸந்நிதியிலே இயற்பா அநுஸந்தித்த உடனே நூற்றந்தாதியை வரிசையுடன் கேட்டருளுகிறார்............உடையவர் நூற்றந்தாதியை இயற்பாவோடே, முதலாயிரத்திலே 'கண்ணி நுண் சிறுத்தாம்பை'ப் போலே சேர்த்து, ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் ப்ரபந்த காயத்திரியாக நித்யாநுஸந்தேயம் என்றும்;...திட்டம் செய்தருளினார்.

---

*பிற்காலத்தில் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களுக்கு இராக-தாளம் குறித்த ஸ்ரீ அப்பாவு முதலியார் இயற்பாப் பிரபந்தங்களுக்கும் இராக-தாளம் அமைத்திருக்கிறார். இசைப் பாக்களைப் போல இயற்பாக்களுக்கும் இராக-தாளம் அமைத்தது மிகமிகப் பிற்பட்ட காலத்து வழக்கமே ஆகும்.

அது முதலாக, முதலாயிரத்தில் 'கண்ணிநுண் சிறுத்தாம்பை'ப் போலே, இயற்பா இறுதியில் 'இராமாநுச நூற்றந்தாதி' எங்கும் ஓதப்படுவதாயிற்று. இப்பொழுதும் அவ் வழக்கம் இருந்துவருகிறது. கோயில்களில் இயற்பாவின் இறுதியில் இப் பிரபந்தத்தை அநுஸந்தித்து வருகிறார்கள். இதனால் இந் நூற்றந்தாதி இயற்பாப் பிரபந்தங்களுள் ஒன்றாக அமைந்துவிட்டமை புலனாம்.

கி. பி. 1856ல் அச்சிடப்பட்ட ஸ்ரீ கூர்மாசாரியர் பதிப்பில் இயற்பாவுடன் 'இராமாநுச நூற்றந்தாதி' சேர்த்துப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. திவ்யப் பிரபந்தம்-நான்கு ஆயிரங்களும் பெரும்பாலான ஏட்டுப் பிரதிகளிலும் தனித் தனியாகவே அமைந்துள்ளன. பெரும்பாலான இயற்பா ஏடுகளில் 'இராமாநுச நூற்றந்தாதி' இறுதியில் சேர்ந்தே அமைந்துள்ளது. நாலாயிரம் முழுமையுமுள்ள ஒரு சில ஏடுகளில் இயற்பாவை நான்காவது ஆயிரமாக அமைத்துள்ளனர். திருமொழி-திருவாய்மொழித் திருநாளில் இறுதியாக இயற்பாவை ஓதும் வழக்கமும் இந்த அமைப்பு முறையை உறுதிப்படுத்துகிறது.

இங்ஙனமாகவும், பிற்பட்ட பதிப்பாசிரியர்கள் பலரும் 'இராமாநுச நூற்றந்தாதி'யை இயற்பா இறுதியில் சேர்க்காமல், திருவாய்மொழிக்கும் பின்னர், திவ்யப் பிரபந்தத்தின் இறுதியில், பதிப்பித்துள்ளார்கள். கி. பி. 1865ல் திவ்யப் பிரபந்தத்தைப் பதிப்பித்த ஸ்ரீ அப்பாவு முதலியார் இயற்பாவுடன் 'இராமாநுச நூற்றந்தாதி'யைச் சேர்க்காமலும், திருவாய்மொழியின் இறுதியில் இணைக்காமலும், தனி நூலாகவே வெளியிட்டுள்ளார். நாலாயிரம் எண்ணிக்கையில் இவர் இப் பிரபந்தத்தை உட்படுத்தவில்லை. இவரைப் பின்பற்றியே பின் வந்த பதிப்பாசிரியர்கள் திவ்யப் பிரபந்தத்தின் இறுதிச் சேர்க்கையாக 'இராமாநுச நூற்றந்தாதி'யை அமைத்தனர் என்று தோன்றுகிறது. ஏடுகளில் அமைந்துள்ள முறை கருதியும், வாசிப்பதற்கு வசதியாயிருக்கும் என்ற நோக்கத்தினாலேயும், நான்கு தொகுதியாக வெளியிடப்பெறும் இந்தத் திவ்யப் பிரபந்தப் பதிப்பிலே இராமாநுச நூற்றந்தாதி இயற்பாவுடன் சேர்த்தே வெளியிடப்படுகிறது.

இயற்பாத் தொகுதியில் ஒரே பாடலாக உள்ள 'திரு எழுகூற்றிருக்கை', 'சிறுத் திருமடல்', 'பெரிய திருமடல்' என்னும் மூன்றைத் தவிர்த்து, ஏனைய எட்டுப் பிரபந்தங்களும் அந்தாதிப் பிரபந்தங்கள். அந்தாதியாவது ஒரு பாடலின் இறுதியில் அமைந்த

எழுத்தேனும், அசையேனும், சீரேனும் அடுத்த பாடலின் தொடக்கமாகக் கொண்டு பாடப்பெறும் பிரபந்தம். இந்தப் பிரபந்தத்தின் இறுதியும் முதலும் மண்டலித்துவரப் பாடுதல் மரபு. இதனை நேரிசை வெண்பா அல்லது கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களால் பாடுவர். இதனால் வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி எனவும் வழங்கும். அந்தாதிப் பிரபந்தங்களைப் பெரும்பாலும், நூறு பாடல்கள் கொண்டனவாகச் செய்து வருதல்பற்றி, 'நூற்றந்தாதி' என்று குறிப்பிடுதலும் உண்டு.

இயற்பாவில் 'இராமாநுச நூற்றந்தாதி' மட்டும் கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் அமைந்தது. 'திருவிருத்தமும்' கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் அமைந்த அந்தாதிப் பிரபந்தமாக இருந்த போதிலும், இதனை அந்தாதி என்று பெயரிட்டு வழங்குதல் இல்லை. ஏனைய அந்தாதிப் பிரபந்தங்கள் எல்லாம் வெண்பா அந்தாதிகள். முதலாழ்வார்கள் மூவரும் பாடிய அந்தாதிகள் ஒவ்வொன்றிலும் 100 பாடல்கள் உள்ளன. நான்காம் திருவந்தாதியில் 96 பாடல்களும், பெரிய திருவந்தாதியில் 87 பாடல்களும் அமைந்துள்ளன. இராமாநுச நூற்றந்தாதியில் 108 பாடல்கள் உள்ளன. அந்தாதிப் பிரபந்தங்கள் நூறு பாடல் என்னும் வரையறை இன்றி, மிக்கும் குறைந்தும் பல்வேறு எண்ணிக்கைகளைப் பெற்று வருவதும் உண்டு என்பது இயற்பாப் பிரபந்தங்களால் தெரியவருகிறது.

அந்தாதிப் பிரபந்தங்களைத் தொடர்நிலைச் செய்யுள் வகையில் சொல்-தொடர்நிலைச் செய்யுள் என்று சொல்லுவர். 'விருந்தே தானும்—புதுவது கிளந்த யாப்பின் மேற்றே' (பொருள் 1551) என்ற தொல்காப்பியச் சூத்திர உரையில் பேராசிரியர் 'விருந்து தானும் புதிதாகப் பாடும் தொடர்நிலை மேற்று.........புதிதாகத் தாம் வேண்டியவாற்றால் பல செய்யுளும் தொடர்ந்துவரச் செய்வது. அது முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும் என உணர்க' என்று கூறியுள்ளார். இதனால் பொய்கையாழ்வார் முதலாயினோர் செய்தருளிய அந்தாதிப் பிரபந்தங்கள் 'விருந்து' வகையைச் சார்ந்த புதுமைப் பிரபந்தங்கள் என்பது தெளிவாம்.

முதல் திருவந்தாதிக்கு 'மூத்த திருவந்தாதி' என்னும் பெயர் மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஏட்டில் தரப்பட்டுள்ளது. நான்காம் திருவந்தாதியை நூலின் தொடக்கத்தை அநுசரித்து 'நான்முகன்

திருவந்தாதி ' என்று இப்பொழுது வழங்குகிறார்கள். பெரும்பான்மையான ஏடுகளில் ' நாலாம் திருவந்தாதி ', ' நான்காம் திருவந்தாதி ' என்றே பெயர் காணப்படுகிறது. கி. பி. 1856ல் வெளிவந்த ஸ்ரீ கூர்மாசாரியர் பதிப்பிலும், கி. பி. 1865ல் வெளிவந்த ஸ்ரீ அப்பாவு முதலியார் பதிப்பிலும், ' நான்காம் திருவந்தாதி ' என்றே பெயர் கொடுத்துள்ளனர். இப் பதிப்பிலும் ' நான்காம் திருவந்தாதி ' என்றே பெயர் அமைக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ சடகோபர் அருளிய அந்தாதிக்குப் ' பெரிய திருவந்தாதி ' என்று பெயர் வழங்குகிறது. இப் பெயர் நூலின் பொருள்-சிறப்புக் கருதி அமைந்தது எனச் சிலர் கூறுவர். இவர்கள் பெருமை பொருந்திய அந்தாதி பெரிய திருவந்தாதி எனக் கருதுகின்றனர். மற்றும் சிலர் ' பெரிய திருவந்தாதி 'யில் அமைந்த ஒரு பாடலில், ' யான் பெரியன், நீ பெரியை என்பதனை யார் அறிவார் ?' என்று ஆழ்வார் அருளிச் செய்வதால், இதற்குப் பெரிய திருவந்தாதி என்று பெயர் அமைந்தது என்பர். பரிமேலழகர் திருக்குறள் உரையில், 'இறைமாட்சி' என்னும் அதிகாரத்தின் அவதாரிகையில், ' திரு உடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும் (3271) என்று பெரியாரும் பணித்தார் ' என்று குறித்துள்ளார். இங்குப் பெரியார் என்றது ஸ்ரீ சடகோபரை. ஸ்ரீ சடகோபருக்குப் பெரியன் அல்லது பெரியார் என்பதை ஒரு பெயராகக்கொண்டு, பெரியன் செய்த திருவந்தாதி பெரிய திருவந்தாதி என்கின்றனர் போலும்.

' திருவாசிரியம் ', 'திரு எழு கூற்றிருக்கை', இரண்டும் ஆசிரியப் பாவால் ஆகிய பிரபந்தம். திருவாசிரியம் அந்தாதிப் பிரபந்தமாய் அமைந்தும், இயற்பாவில் உள்ள ஏனைய அந்தாதிப் பிரபந்தங்களைப் போல, இறுதியும் முதலும் மண்டலித்து அமையவில்லை.

' திரு எழு கூற்றிருக்கை ' என்பது சித்திரக் கவி வகையுள் ஒன்று. இத் திரு எழு கூற்றிருக்கைப் பாடலை ரத-பந்தமாகச் சில பதிப்புக்களில் அமைத்துக் காட்டுவர். திருஞான சம்பந்தரது தேவாரத் திருமுறைகளில், முதல் திருமுறையில், எழுகூற்றிருக்கை உள்ளது. நக்கீரர் பெயரால் வழங்கும் திரு எழு கூற்றிருக்கை பதினோராந் திருமுறையில் ஒரு பிரபந்தமாக உள்ளது. பிற்காலத்தில் ' மாறன் அலங்காரம் ' செய்த திருக்குருகைப் பெருமாள் கவிராயர் தமது அலங்கார நூலில் ஸ்ரீ சடகோபரை முன்னிட்டுத் திரு எழு கூற்றிருக்கை பாடியுள்ளார்.

'திருவிருத்தம்', 'சிறுத் திருமடல்', 'பெரிய திருமடல்', மூன்றும் அகத்துறைப் பிரபந்தங்கள். திருவிருத்தம் நூறு பாட்டுக் களை அந்தாதியாகப் பெற்றதொரு நூல். விருத்தம் என்னும் சொல் லிற்குச் செய்தி என்று பொருள்கொண்டு, ஆழ்வார் தமது அன்பு மிகுதி முதலிய செய்திகளை ஏறிட்டுச் சொன்ன பிரபந்தமாதலின் திருவிருத்தம் என்று பெயராயிற்று என்று கூறுவது உண்டு. இக் கருத்தினை அரண் செய்வது போன்ற குறிப்புக்களையும் இந்நூலின் முதற் பாசுரத்திலும் இறுதிப் பாடலிலும் கண்டு காட்டலாம். ஆனால், ஆசிரியப் பாவாலான பிரபந்தம் 'திருவாசிரியம்' ஆனாற் போல, விருத்தக் கலித்துறையால் அமைந்த இப் பிரபந்தமும் 'திரு விருத்தம்' எனப் பெயர் பெற்றது என்பது பொருந்தும். இப் பிரபந்தம் மாணிக்கவாசகரது 'திருக்கோவையார்' போன்ற அகப் பொருள் அமைதியைப் பெற்றுள்ளது.

'மடல்' என்பது அகப்பொருள் துறைகளுள் ஒன்று. காதல் கைகூடாத தலைமகன் மடல் ஊர்ந்தாயினும், தான் காதல் கொண்ட தலைவியைப் பெறுவேன் என்று சொல்வதாக அமைவது இத் துறை. தலைமகன் தன் காதலை உலகு அறிய வெளிப்படுத்துதலே இதன் நோக்கம். தலைவன் பனை மடலால் குதிரை வடிவாகச் செய்து, அதன்மேல் ஏறி, பித்தன் போல ஊர் நடுவே தோன்றுவன் என்றும், இதனால் இவனது காதலின் உண்மையை உணர்ந்த பெரியோர் உதவி செய்வர் என்றும் கூறுதல் மரபு. பெண்கள் மடல் ஏறுதல் மரபு அன்று. ஆனால், 'சிறுத் திருமடல்', 'பெரிய திருமடல்' இரண்டும் நாயகனைப் பெறாத நாயகி மடல் ஊர்வதாக அமைந்துள்ளன.

> அன்ன நடையார் அலர் ஏச, ஆடவர்மேல்
> மன்னும் மடல் ஊரார் என்பது ஓர் வாசகமும்
> தென் உரையில் கேட்டு அறிவது உண்டு—அதனை யாம் தெளியோம்;
> மன்னும் வடநெறியே வேண்டினோம்;...... (2732, 2733)

எனப் பெரிய திருமடலில் நாயகியே இது தமிழ் வழக்கிற்கு மாறு பட்டது என்று எடுத்துக் காட்டுகிறாள். ஆனால், இம் மடல் பிரபந் தத்தில் தலைவி மடல் ஊர்ந்ததாக இல்லை; ஊர்வேன் என்று தன் துணிவை உரைத்ததாகவே உள்ளது. ஸ்ரீ சடகோபரும் திருவாய் மொழியில் பிரிவாற்றாமை மேலீட்டால் தலைமகள் காதல் கைம்மிக்கு, மடலூரத் துணிவதாகப் பாடியுள்ளமையும் (3371, 3372) கவனித் தற்கு உரியது.

அரசாங்கத் தொன்னூல் நிலையச் சுவடிகளிலும், பிரதேசச் சுவடிகளான இயற்பா ஏடுகளிலும் 'சிறுத் திருமடல்' என்ற பெயரே பெரும்பாலும் காணப்படுகிறது. இதனால், 'கண்ணி நுண் சிறுத் தாம்பு' என வழங்குதல் போல, மடல் பிரபந்தத்தில் சிறியதான இதனையும், 'சிறுத் திருமடல்' என்பது முன்னர் பெருவழக்கா யிருந்தது எனத் துணியலாம். பின்னர், வரவரப் பெரிய திருமடல் என்பதனோடு ஒக்க, 'சிறிய திருமடல்' என வழங்கி வந்திருக்க வேண்டும். பெரும்பான்மையான ஏட்டுப் பிரதிகளை ஒட்டியே இப் பதிப்பிலும், 'சிறுத் திருமடல்' என்று பெயர் அமைக்கப்பட் டுள்ளது.

சிறுத் திருமடலும் பெரிய திருமடலும் கலி வெண்பாவால் பாடப்பெற்ற ஒரே பாடல் வகையால் ஆகிய பிரபந்தங்கள். ஆயினும், திவ்யப் பிரபந்தம் நாலாயிரம் பாசுரம் பூர்த்தியாய் உள்ளது என்று கருதி, இரு மடல்களையும் பல பாசுரங்களாகக் கொண்டுள்ளனர். இதில் இரு வேறு கொள்கைகள் உள்ளன.

அப்பிள்ளார் என்பார் மடலில் அமைந்த ஒரு கண்ணியை (இரண்டு வரிகளை) ஒரு பாசுரமாகக் கொண்டு, சிறுத் திருமடல் $77\frac{1}{2}$ பாசுரம் என்றும், பெரிய திருமடல் $148\frac{1}{2}$ பாசுரம் என்றும் கணக் கிட்டு, இரு மடலிலும் 226 பாசுரங்கள் உள்ளனவாகக் கொள்வர். இது இவர் பாடிய திருமங்கை மன்னன் வாழித் திருநாமத்தில்,

> இலங்கு எழுகூற்றிருக்கை, இருமடல், ஈந்தான் வாழியே !
> இம்மூன்றில் இருநூற்று இருபத்து ஏழ் ஈந்தான் வாழியே !

எனவரும் பகுதியால் தெரியவருகிறது. இவரது கொள்கைப்படி இராமாநுச நூற்றந்தாதி இன்றியே நாலாயிரம் என்ற எண்ணிக்கை பூர்த்தியாகி விடுகிறது.

இராமாநுச நூற்றந்தாதியைச் சேர்த்து நாலாயிரம் கொண்டவர் ஸ்ரீ தேசிகன். இவர் தாம் பாடிய பிரபந்த சாரத்தில் இரு திருமடல் களையும் 118 பாசுரங்களாகக் கொள்வர்.

> சிறிய திருமடற் பாட்டு முப்பத்தெட்டு இரண்டும்
> சீர் பெரிய மடலினிற் பாட்டு எழுபத்தெட்டும்

என்பது இவரது பாசுரப் பகுதி (பிரபந்தசாரம், 13). பிறிதோரிடத் தில் (பிரபந்தசாரம், 16) திருமங்கை மன்னன் பாசுரங்கள் 1253 என் கிறார். மடல் ஒழிந்த நான்கு பிரபந்தங்களிலும் அடங்கிய பாசுரங்கள்

1135. எனவே, இரு மடல்களும் 118 செய்யுட்கள் ஆகும் என்பது இதனாலும் தெளிவாகும்.

ஸ்ரீ தேசிகன் சிறுத் திருமடல் முப்பத்தெட்டு இரண்டும், பெரிய மடற் பாட்டு எழுபத்தெட்டு என்று குறித்த எண்ணிக்கையை ஒரு சிலரைத் தவிரப் பதிப்பாசிரியர்களில் பெரும்பாலாரும் மேற்கொண்டிருக்கிறார்கள். பாடலின் பொருட் போக்கைக்கொண்டு, அங்கங்கே பாசுரங்களாக நிறுத்தியுள்ளனர். வியாக்கியானம் அச்சிட்டவர்களும், ஸ்ரீ அப்பாவு முதலியார் ஸ்ரீ பி. ப. அண்ணங்கராசாரியர் ஒழிந்த மூல பாடம் பதிப்பித்த பிற பதிப்பாசிரியர்களும், பாடலின் இடையிடையே நிறுத்தவேண்டும் இடங்களில் சிறியதொரு கோடிட்டுக் காட்டியுள்ளனர். இதோடு ஒவ்வொரு கண்ணிக்கும் தனித் தனி எண்களும் தந்திருக்கிறார்கள். கி. பி. 1856ல் பதிப்பித்த கூர்மாசாரியர் பதிப்பில் மட்டும் கோடு வரும் இடங்களில் எண்கள் காணப்படுகின்றன. கண்ணிகளாகப் பிரித்து இவர் எண் இடவில்லை. இப்பதிப்புக்களில் பெரிய திருமடலை 78 பாசுரமாகப் பிரித்துக் காட்டியிருக்கின்றனர். சிறுத் திருமடலை 40 பாசுரமாகக் கொள்வதில் நூலை 38 பாசுரமாகவும், பிற்சேர்க்கையாக உள்ள பாடலை 2 பாடலாகவும் கொள்ளுகின்றனர்.

பாடலின் இடையில் அவரவர்க்குத் தோற்றியபடி கோடு இட்டனரென்று சொல்ல முடியாது. ஏட்டுப் பிரதிகளில் பாசுரங்களாகக் கணக்கிடும் இடங்களில் எண்களையே எழுதியுள்ளனர். இந்த எண்களுக்குப் பிரதியாகத்தான் பதிப்பாசிரியர்கள் கோடுகளை அமைத்து வந்திருக்கிறார்கள். இவர்களது அமைப்பில் சிறுத் திருமடலில் பிற்சேர்க்கைப் பாடலையும் சேர்த்து 40 பாட்டல்கள் கொண்டது பொருத்தமாகத் தோன்றவில்லை.

ஒரு சில ஏட்டுப் பிரதிகளில் சிறுத் திருமடலை 38 பாசுரமாகக் கொண்டதோடு, பெரிய திருமடலை 80 பாசுரமாகக் கொண்டு எண் இட்டுள்ளனர். இதனால் இரு மடல் பிரபந்தங்களும் 118 செய்யுட்கள் என்ற எண்ணிக்கை நிரம்பி விடுகிறது. தேசிகப் பிரபந்தத்திலே, சிறிய திருமடல் முப்பத்தெட்டு இரண்டும் பெரிய திருமடல் எழுபத்தெட்டும் என்று உள்ளதனை, சிறிய திருமடல் முப்பத்தெட்டு; இரண்டும் எழுபத்தெட்டும் பெரிய திருமடல் எனக் கூட்டிப் பெரிய திருமடலை எண்பது பாசுரமாகக் கொண்டனரோ என்று நினைக்க இடம் உண்டு. இப் பதிப்பிலே சிறுத் திருமடல் 38 பாசுரங்களாக

வும், பெரிய திருமடல் 80 பாசுரங்களாகவும் கொண்டுள்ள பிரதி களைப் பின்பற்றிப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பாடல்கள் பிரியும் இடத்தில் கோடு அமைத்ததோடு, ஓரத்தில் எண்ணும் தரப்பட் டிருக்கிறது.

ஒரே பாடலாக அமைந்த நீண்ட பாசுரங்களைப் பொருள் முடிவு கருதி, தனித் தனிப் பகுதியாகப் பிரித்துக் கொள்ளுதல் பழமையாக வரும் ஒரு மரபே ஆகும். நச்சினார்க்கினியர் நீண்ட பாடல்களைக் கொண்ட பத்துப்பாட்டைப் பகுதி பகுதியாகப் பொருள்-இயைபுக் குத் தக்கபடி பிரித்துக்கொண்டு, பொருள் உரைத்துள்ளார். சிலப்பதி கார உரையில் அடியார்க்கு நல்லாரும் இம்முறையை மேற்கொண் டுள்ளனர். இம் மரபை ஒட்டியே இரு மடல் பிரபந்தங்களையும் பல பாசுரங்களாகக் கொண்டு எண்ணும் மரபும் ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

இயற்பாப் பிரபந்தங்களுக்கு ஆன்றோர்கள் அருளிய தனியன்கள் நூல்-முகப்பில் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பெரிய திரு மடலுக்கு 'பொன்-உலகில் வானவரும்' என்ற தனியனின்பின், 'மூளும் பழவினை எல்லாம்' எனத் தொடங்கும் மற்றொரு தனி யனும் சில ஏடுகளில் காணப்படுகிறது. இத் தனியனும் இதில் உடன் சேர்க்கப்பட்டுள்ளது. இயற்பாப் பிரபந்தங்களில் திரு எழுகூற் றிருக்கை, சிறுத் திருமடல் இரண்டிற்கும் ஒவ்வொரு பாடலும், பெரிய திருமடலிற்கு இரண்டு பாடல்களும் பிற்சேர்க்கையாக உள்ளன. இப் பிற்சேர்க்கைப் பாடல்களும் தனியனுடன் ஒரு சேர அமைக்கப்பட்டுள்ளன. பெரிய திருமடலின் பிற்சேர்க்கைப் பாடல் கள் இரண்டில் 'மண்ணில் பொடி பூசி' என்ற பாடல் மிகுதியாக வழங்குவதில்லையாம்.

பாட ரூப பேதங்கள் இறுதியில் அமைக்கப்பட்டுள்ளன. இப் பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடி-புத்தகங்களின் விவரங்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அதன்பின், அரும்பத விளக்க அகராதி ஒன்றும் சேர்க்கப்பட்டுள்ளது. இது பெரும்பாலும் வியாக்கியான கர்த்தர்களின் பொருட் போக்கைத் தழுவியே அமைக் கப்பட்டுள்ளது. இயற்பாவில் ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய் தருளிய திருப்பதிகளின் விவரமும் ஒரு தனி அநுபந்தமாக அமைக் கப்பட்டுள்ளது.

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்த ‘ திவ்யப் பிரபந்தப் பாசுரப்படி இராமாயணம்’ ஒரு பிற்சேர்க்கையாக நூல் இறுதியில் அமைக்கப் பெற்றுள்ளது. இதன்பின், திவ்வப் பிரபந்தத்தில் ஆழ்வார் களால் குறிப்பிடப் பெற்ற இதிகாச புராண வரலாறுகள் முதலியன ஆழ்வார்களின் அருளிச் செயல்களை அடியொற்றித் தொகுத்து, ‘ திவ்யப் பிரபந்தக் கதைக் குறிப்புக்கள் ’ என்னும் தலைப்பில் தரப் பட்டுள்ளன.

திருவாய்மொழிப் பதிப்பிற்கு உதவிய பதிப்பாசிரியக் குழு வினரே தொடர்ந்து இயற்பாவைப் பதிப்பிக்க உதவிபுரிந்துள்ளனர். பதிப்பாசிரியக் குழுவினராகிய ஸ்ரீ வை. மு. கோபால கிருஷ்ணமா சாரியர், ஸ்ரீ காரப்பங்காடு வேங்கடாசாரியர், ஸ்ரீ வேங்கடராஜுலு ரெட்டியார், ஸ்ரீ பி. ஸ்ரீ., ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி ஆகிய இவ் ஐவர்க்கும் எமது உளம் கனிந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

பதிப்பாசிரியக் குழுவினரின் ஆலோசனைகளை ஏற்று, சந்தி முதலியன பிரித்துச் செய்யுளை அமைத்தும், பாட பேதங்கள், அரும்பத விளக்கம் முதலியவற்றைத் தக்கவண்ணம் தயாரித்து அமைத்தும் நூலைச் செவ்வையாக வெளியிட உதவிய வித்வான் மு. சண்முகம் பிள்ளை அவர்களுக்கும் எமது நன்றி.

இப் பதிப்பைத் தமிழுலகம் வரவேற்று, இவ்வகையான இலக்கியப் பதிப்பு முயற்சிகளில் மேலும் மேலும் ஈடுபட, எங்களுக்கு ஊக்கம் அளிக்கப் பிரார்த்திக்கிறோம்.

மர்ரே அண்டு கம்பெனி
சென்னை
29—8—’56

**வெளியிடுவோர்**

# உள்ளுறை

ஸ்ரீ :

# தனியன்கள்

## முதல் திருவந்தாதி

கைதை சேர் பூம் பொழில் சூழ் கச்சி நகர் வந்து உதித்த
பொய்கைப் பிரான், கவிஞர் போர் ஏறு, வையத்து
அடியவர்கள் வாழ அருந் தமிழ் அந்தாதி
படி விளங்கச் செய்தான், பரிந்து.

## இரண்டாம் திருவந்தாதி

என் பிறவி தீர, இறைஞ்சினேன்—இன் அமுதா
அன்பே தகளி அளித்தானை, நன் புகழ் சேர்
சீதத்து ஆர் முத்துக்கள் சேரும் கடல் மல்லைப்
பூதத்தார் பொன் அம் கழல்.

## மூன்றும் திருவந்தாதி

சீர் ஆரும் மாடத் திருக்கோவலூர்-அதனுள்
கார் ஆர் கரு முகிலைக் காணப் புக்கு, ஓராத்
திருக்கண்டேன் என்று உரைத்த சீரான் கழலே
உரைக்கண்டாய், நெஞ்சே ! உகந்து.

## நான்காம் திருவந்தாதி

நாராயணன் படைத்தான், நான்முகனை ; நான்முகனுக்கு
ஏர் ஆர் சிவன் பிறந்தான் என்னும் சொல் சீர் ஆர்
மொழி செப்பி வாழலாம் ; நெஞ்சமே ! மொய் பூ
மழிசைப்பரன் அடியே வாழ்த்து.

## திருவிருத்தம்

கரு விருத்தக் குழி நீத்தபின், காமக் கடுங் குழி வீழ்ந்து,
ஒரு விருத்தம் புக்கு, உழலுறுவீர் ! உயிரின் பொருள்கட்கு
ஒரு விருத்தம் புகுதாமல், குருகையர்கோன் உரைத்த
திருவிருத்தத்து ஓர் அடி கற்று இரீர்—திருநாட்டகத்தே.

## திருவாசிரியம்

காசினியோர்-தாம் வாழ, கலியுகத்தே வந்து உதித்து,
ஆசிரியப்பா-அதனால் அரு மறை நூல் விரித்தானை ;
தேசிகனை ; பராங்குசனை ; திகழ் வகுளத் தாரானை—
மாசு அடையா மனத்து வைத்து, மறவாமல், வாழ்த்துதுமே.

## பெரிய திருவந்தாதி

முந்துற்ற நெஞ்சே! முயற்றி, தரித்து உரைத்து,
வந்தித்து, வாயார வாழ்த்தியே, சந்த
முருகு ஊறும் சோலை சூழ் மொய்பூம் பொருநல்
குருகூரன், மாறன் பேர் கூறு.

## திரு எழுகூற்றிருக்கை

வாழி, பரகாலன்! வாழி, கலிகன்றி!
வாழி, குறையலூர் வாழ் வேந்தன்! வாழியரோ—
மாயோனை வாள் வலியால் மந்திரம்கொள் மங்கையர்–கோன்,
தூயோன் சுடர் மான வேல்!

சீர் ஆர் திரு எழுகூற்றிருக்கை என்னும் செந்தமிழால்
ஆரா-அமுதன், குடந்தைப் பிரான்-தன் அடி-இணைக்கீழ்
ஏர் ஆர் மறைப்பொருள் எல்லாம் எடுத்து, இவ் உலகு உய்யவே,
சோராமல் சொன்ன அருள்-மாரி பாதம் துணை, நமக்கே.

## சிறிய திருமடல்

முள்ளிச் செழு மலரோ தாரான்—முளை மதியம்
கொள்ளிக்கு என் உள்ளம் கொதியாமே: வள்ளல்,
திருவாளன், சீர்க் கலியன், கார்க் கலியை வெட்டி
மருவாளன் தந்தான், மடல்.

## பெரிய திருமடல்

பொன்-உலகில் வானவரும், பூமகளும் போற்றி செய்யும்
நல் நுதலீர்! நம்பி நறையூரர் மன் உலகில்
என் நிலைமை கண்டும் இரங்காரேயாமாகில்,
மன்னும் மடல் ஊர்வன் வந்து.

மூளும் பழவினை எல்லாம் அகல முனிந்தருளி,
ஆளும் குறையல் அருள்-மாரி அம் பொன் மதிள் அரங்கர்
தாள் அன்றி மற்று ஓர் சரண் இல்லை என்று தரும் தடக்கை
வாளும் பலகையுமே அடியேன் நெஞ்சம் மன்னியதே.

## இராமாநுச நூற்றந்தாதி

முன்னை வினை அகல, மூங்கில்குடி அமுதன்
பொன் அம் கழல் கமலப்போது இரண்டும் என்னுடைய
சென்னிக்கு அணி ஆகச் சேர்த்தினேன்—தென்புலத்தார்க்கு
என்னுக் கடவுடையேன் யான்?

நயம் தரு பேரின்பம் எல்லாம் பழுது இன்றி, நண்ணினர்பால்
சயம் தரு கீர்த்தி இராமாநுச முனி தாள்-இணைமேல்
உயர்ந்த குணத்துத் திருவரங்கத்தமுது ஓங்கும் அன்பால்
இயம்பும் கலித்துறை-அந்தாதி ஓத இசை, நெஞ்சமே!

இனி என் குறை நமக்கு—எம்பெருமானார் திருநாமத்தால்
முனி தந்த நூற்றெட்டுச் சாவித்திரி என்னும் நுண்பொருளை
கனிதந்த செஞ்சொல் கலித்துறை-அந்தாதி பாடித் தந்தான்,
புனிதன் திருவரங்கத்தமுது ஆகிய புண்ணியனே ?

சொல்லின் தொகை கொண்டு, உனது அடிப்போதுக்குத் தொண்டு செய் [யும்
நல் அன்பர் ஏத்தும் உன் நாமம் எல்லாம் என்தன் நாவினுள்ளே,
அல்லும் பகலும், அமரும்படி நல்கு—அறுசமயம்
வெல்லும் பரம! இராமாநுச!—இது என் விண்ணப்பமே.

## பிற்சேர்க்கைப் பாடல்கள்

### திரு எழுகூற்றிருக்கை

இடம் கொண்ட நெஞ்சத்து இணங்கிக் கிடப்பன—என்றும் பொன்னித்
தடம் கொண்ட தாமரை சூழும் மலர்ந்த தண் பூங் குடந்தை
விடம் கொண்ட வெண் பல், கருந் துத்தி, செங் கண், தழல் உமிழ் வாய்,
படம் கொண்ட பாம்பு-அணைப் பள்ளிகொண்டான் திருப்பாதங்களே.

### சிறுத் திருமடல்

ஊராது ஒழியேன், உலகு அறிய, ஒள்-நுதலீர்!
சீர் ஆர் முலைத்தடங்கள் சேரளவும் : பார் எல்லாம்
அன்று ஓங்கிநின்று அளந்தான் நின்ற திருநறையூர்
மன்று ஓங்க ஊர்வன்—மடல்.

### பெரிய திருமடல்

என் நிலைமை எல்லாம் அறிவித்தால், எம் பெருமான்
தன் அருளும் ஆகமும் தாரானேல், பின்னைப்போய்
ஒண் துறை நீர் வேலை உலகு அறிய ஊர்வன், நான்—
வண்டு அறை பூம் பெண்ணை மடல்.

மண்ணில் பொடிப் பூசி, வண்டு இரைக்கும் பூச் சூடி,
பெண்ணை மடல் பிடித்துப் பின்னே, அண்ணல்
திருநறையூர் நின்ற பிரான் தேர் போகும் வீதி
பொரு முறையால் செல்வம், புரிந்து.

ஸ்ரீ :

## பொய்கை ஆழ்வார் அருளிச்செய்த

# முதல் திருவந்தாதி

**வை**யம் தகளியா, வார் கடலே நெய் ஆக,
வெய்ய கதிரோன் விளக்கு ஆக, செய்ய
சுடர்-ஆழியான் அடிக்கே சூட்டினென் சொல்-மாலை—
இடர்-ஆழி நீங்குகவே என்று. 1

என்று கடல் கடைந்தது ? எவ் உலகம் நீர் ஏற்றது ?—
ஒன்றும் அதனை உணரேன் நான் : அன்று, அது—
அடைத்து, உடைத்து, கண்படுத்த ஆழி ; இது—நீ
படைத்து, இடந்து, உண்டு, உமிழ்ந்த பார். 2

பார் அளவும் ஓர் அடி வைத்து, ஓர் அடியும் பார் உடுத்த
நீர் அளவும் செல்ல நிமிர்ந்ததே : சூர் உருவின்
பேய் அளவு கண்ட பெருமான்! அறிகிலேன்—
நீ அளவு கண்ட நெறி. 3

நெறி வாசல் தானேயாய் நின்றானை, ஐந்து
பொறி வாசல் போர்க் கதவம் சாத்தி, அறிவானும்—
ஆல மர நீழல் அறம் நால்வர்க்கு அன்று உரைத்த,
ஆலம் அமர் கண்டத்து, அரன் ! 4

அரன், நாரணன்—நாமம் ; ஆன்விடை, புள்—ஊர்தி ;
உரை—நூல், மறை ; உறையும் கோயில்—வரை, நீர் ;
கருமம்—அழிப்பு, அளிப்பு ; கையது—வேல், நேமி ;
உருவம்—எரி, கார் ; மேனி, ஒன்று. 5

ஒன்றும் மறந்தறியேன், ஓத நீர் வண்ணனை நான் ;
இன்று மறப்பனோ, ஏழைகாள் ? அன்று,
கரு-அரங்கத்துள் கிடந்து கைதொழுதேன், கண்டேன்—
திருவரங்கம் மேயான் திசை. 6

திசையும், திசை உறு தெய்வமும், தெய்வத்து
இசையும் கருமங்கள் எல்லாம்—அசைவு இல் சீர்க்
கண்ணன், நெடு மால், கடல் கடைந்த கார் ஓத
வண்ணன் படைத்த மயக்கு. 7

மயங்க, வலம்புரி வாய் வைத்து, வானத்து
இயங்கும் எறி கதிரோன்-தன்னை, முயங்கு அமருள்,
தேர் ஆழியால் மறைத்தது என் நீ, திருமாலே!—
போர் ஆழிக் கையால் பொருது ? 8

பொரு கோட்டு ஓர் ஏனமாய்ப் புக்கு இடந்தாய்க்கு,அன்று உன்
ஒரு கோட்டின் மேல் கிடந்தது அன்றே—விரி தோட்ட
சேவடியை நீட்டி, திசை நடுங்க, விண் துளங்க,
மா வடிவின் நீ அளந்த மண் ! 9

மண்ணும், மலையும், மறி கடலும், மாருதமும்,
விண்ணும் விழுங்கியது மெய் என்பர் : எண்ணில்,
அலகு அளவு கண்ட சீர் ஆழியாய்க்கு, அன்று இவ்
உலகு அளவும் உண்டோ உன் வாய் ? 10

வாய் அவனை அல்லது வாழ்த்தாது ; கை உலகம்
தாயவனை அல்லது தாம் தொழா ; பேய் முலை நஞ்சு
ஊண் ஆக உண்டான் உருவொடு பேர் அல்லால்—
காணா கண், கேளா செவி. 11

செவி, வாய், கண், மூக்கு, உடல் என்று ஐம் புலனும் ; செந்தீ,
புவி, கால், நீர், விண் பூதம் ஐந்தும் ; அவியாத
ஞானமும், வேள்வியும், நல்லறமும் என்பரே—
ஏனமாய் நின்றாற்கு இயல்வு! 12

இயல்வு ஆக, ஈன் துழாயான் அடிக்கே செல்ல
முயல்வார் இயல் அமரர், முன்னம் ; இயல்வு ஆக
நீதியால் ஓதி, நியமங்களால் பரவ
ஆதியாய் நின்றார்—அவர். 13

அவர் அவர் தாம் தாம் அறிந்தவாறு ஏத்தி,
இவர் இவர் எம் பெருமான் என்று, சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர் : உலகு அளந்த
மூர்த்தி உருவே முதல். 14

முதல் ஆவார் மூவரே ; அம் மூவருள்ளும்
முதல் ஆவான் மூரி நீர் வண்ணன் ; முதல் ஆய
நல்லான் அருள் அல்லால், நாம நீர் வையகத்துப்
பல்லார் அருளும் பழுது. 15

பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி,
அழுதேன் ; அரவு-அணைமேல் கண்டு, தொழுதேன்—
கடல் ஓதம் கால் அலைப்பக் கண்வளரும் செங்கண்
அடல் ஓத வண்ணர் அடி. 16

அடியும் படி கடப்ப, தோள் திசைமேல் செல்ல,
முடியும் விசும்பு அளந்தது என்பர்—வடி உகிரால்
ஈர்ந்தான் இரணியனது ஆகம், இரும் சிறைப் புள்
ஊர்ந்தான், உலகு அளந்த நான்று. 17

நான்ற முலைத்தலை நஞ்சு உண்டு, உறி வெண்ணெய்
தோன்ற உண்டான், வென்றி சூழ் களிற்றை ஊன்றிப்
பொருது உடைவு கண்டானும், புள்வாய் கீண்டானும்—
மருது இடை போய் மண் அளந்த மால். 18

மாலும் கருங் கடலே! என் நோற்றாய்—வையகம் உண்டு
ஆலின் இலைத் துயின்ற ஆழியான், கோலக்
கரு மேனிச் செங்கண் மால் கண்படையுள் என்றும்
திருமேனி நீ தீண்டப்பெற்று ? 19

பெற்றார் தளை கழலப் பேர்ந்து, ஓர் குறள் உருவாய்,
செற்றார் படி கடந்த செங்கண் மால் நல் தா-
மரைமலர்ச் சேவடியை வானவர் கை கூப்பி,
நிரை மலர் கொண்டு ஏத்துவரால் நின்று. 20

நின்று, நிலம் அங்கை நீர் ஏற்று, மூவடியால்,
சென்று, திசை அளந்த செங்கண் மாற்கு என்றும்
படை ஆழி ; புள் ஊர்தி : பாம்பு-அணையான் பாதம்
அடை, ஆழி நெஞ்சே ! அறி. 21

அறியும் உலகு எல்லாம், யானேயும் அல்லேன்—
பொறி கொள் சிறை உவணம் ஊர்ந்தாய் ! வெறி கமழும்
காம்பு ஏய் மென்தோளி கடை வெண்ணெய் உண்டாயைத்
தாம்பே கொண்டு ஆர்த்த தழும்பு. 22

தழும்பு இருந்த—சார்ங்க நாண் தோய்ந்தவாம் அங்கை ;
தழும்பு இருந்த—தாள், சகடம் சாடி ; தழும்பு இருந்த—
பூங்கோதையாள் வெருவ, பொன் பெயரோன் மார்பு இடந்த
வீங்கு ஓத வண்ணர் விரல். 23

விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு, ஆய்ச்சி
உரலோடு உறப் பிணித்த நான்று, குரல் ஓவாது
ஏங்கி, நினைந்து, அயலார் காண இருந்திலையே ?
ஓங்கு ஓத வண்ணா ! உரை. 24

உரை மேற்கொண்டு, என் உள்ளம், ஓவாது, எப்போதும்,
வரைமேல் மரதகமே போலத் திரைமேல்
கிடந்தானை, கீண்டானை, கேழலாய்ப் பூமி
இடந்தானை ஏத்தி எழும். 25

எழுவார், விடைகொள்வார், ஈன் துழாயானை
வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார்
வினைச் சுடரை நந்துவிக்கும் வேங்கடமே—வானோர்
மனச் சுடரைத் தூண்டும் மலை. 26

மலையால் குடை கவித்து, மா வாய் பிளந்து,
சிலையால் மராமரம் எழ் செற்று, கொலை யானைப்
போர்க் கோடு ஒசித்தனவும், பூங் குருந்தம் சாய்த்தனவும்—
கார்க் கோடு பற்றியான் கை. 27

கைய—வலம்புரியும் நேமியும் ; கார் வண்ணத்து
ஐய ! மலர்மகள் நின் ஆகத்தாள் ; செய்ய
மறையான் நின் உந்தியான் ; மா மதிள் மூன்று எய்த
இறையான் நின் ஆகத்து இறை. 28

இறையும், நிலனும், இரு விசும்பும், காற்றும்,
அறை புனலும், செந்தீயும் ஆவான் ; பிறை மருப்பின்
பைங்கண் மால் யானை படு துயரம் காத்து அளித்த
செங்கண் மால் கண்டாய்—தெளி. 29

தெளிது ஆக உள்ளத்தைச் செந்நிறீஇ, ஞானத்து
எளிது ஆக நன்கு உணர்வார் சிந்தை, எளிது ஆகத்
தாய் நாடு கன்றே போல், தண் துழாயான் அடிக்கே
போய் நாடிக்கொள்ளும்—புரிந்து. 30

புரி ஒரு கை பற்றி, ஓர் பொன் ஆழி ஏந்தி,
அரி உருவும் ஆள் உருவும் ஆகி, எரி உருவ
வண்ணத்தான் மார்பு இடந்த மால் அடியை அல்லால், மற்று
எண்ணத்தான் ஆமோ, இமை ? 31

இமையாத கண்ணால் இருள் அகல நோக்கி,
அமையாப் பொறி புலன்கள் ஐந்தும் நமையாமல்,
ஆகத்து அணைப்பார் அணைவரே—ஆயிர வாய்
நாகத்து அணையான் நகர். 32

நகரம் அருள்புரிந்து நான்முகற்குப் பூமேல்,
பகர மறை பயந்த பண்பன் பெயரினையே
புந்தியால் சிந்தியாது, ஓதி உரு எண்ணும்
அந்தியால் ஆம் பயன் அங்கு என் ? 33

என், ஒருவர் மெய் என்பர்—ஏழ் உலகு உண்டு, ஆல் இலையில்
முன் ஒருவன் ஆய முகில் வண்ணா ! நின் உருகிப்
பேய்த் தாய் முலை தந்தாள் பேர்ந்திலளால் ; பேர் அமர்க் கண்
ஆய்த் தாய் முலை தந்த ஆறு ? 34

ஆறிய அன்பு இல் அடியார் தம் ஆர்வத்தால்
கூறிய குற்றமாக் கொள்ளல் நீ ; தேறி,
நெடியோய் ! அடி அடைதற்கு அன்றே—ஈர்-ஐந்து
முடியான் படைத்த முரண் ? 35

முரணை வலி தொலைதற்கு ஆம் என்றே—முன்னம்
தரணி தனது ஆகத்தானே இரணியனைப்
புண் நிரந்த வள் உகிர் ஆர் பொன்ஆழிக் கையால், நீ
மண் இரந்து கொண்ட வகை ? 36

வகை அறு நுண் கேள்வி வாய்வார்கள், நாளும்,
புகை, விளக்கும், பூம் புனலும் ஏந்தி, திசைதிசையின்
வேதியர்கள் சென்று இறைஞ்சும் வேங்கடமே—வெண் சங்கம்
ஊதிய வாய் மால் உகந்த ஊர். 37

ஊரும் வரி அரவம், ஒண் குறவர் மால் யானை
பேர எறிந்த பெரு மணியைக் கார் உடைய
மின் என்று, புற்று அடையும் வேங்கடமே—மேல சுரர்
எம் என்னும் மாலது இடம். 38

இடந்தது பூமி ; எடுத்தது குன்றம் ;
கடந்தது கஞ்சனை, முன் அஞ்ச ; கிடந்ததுவும்
நீர் ஓத மா கடலே ; நின்றதுவும் வேங்கடமே—
பேர் ஓத வண்ணர், பெரிது. 39

பெரு வில் பகழிக் குறவர் கைச் செந்தீ
வெருவிப் புனம் துறந்த வேழம் இரு விசும்பில்
மீன் வீழக் கண்டு, அஞ்சும் வேங்கடமே—மேல் அசுரர்-
கோன் வீழக் கண்டு, உகந்தான் குன்று. 40

குன்று அனைய குற்றம் செயினும், குணம் கொள்ளும்,
இன்று முதலாக—என் நெஞ்சே! என்றும்,
புறன் உரையே ஆயினும், பொன் ஆழிக் கையான்
திறன் உரையே சிந்தித்திரு. 41

திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால்,
திருமகட்கே தீர்ந்தவாறு என்கொல்—திருமகள்மேல்
பால் ஓதம் சிந்தப் பட நாகணைக் கிடந்த
மால் ஓத வண்ணர் மனம் ? 42

மன மாசு தீரும் ; அரு வினையும் சாரா ;
தனம் ஆய தானே கைகூடும் : புனம் மேய
பூந் துழாயான் அடிக்கே போதொடு நீர் ஏந்தி,
தாம் தொழாநிற்பார் தமர். 43

தமர் உகந்தது எவ் உருவம், அவ் உருவம் தானே ;
தமர் உகந்தது எப் பேர், மற்று அப் பேர் ; தமர் உகந்து
எவ் வண்ணம் சிந்தித்து இமையாது இருப்பரே,
அவ் வண்ணம்—ஆழியான் ஆம். 44

ஆமே அமரர்க்கு அறிய ?—அது நிற்க,
நாமே அறிகிற்போம், நல் நெஞ்சே! பூ மேய
மா தவத்தோன் தாள் பணிந்த வாள் அரக்கன் நீள் முடியை
பாதம்-அத்தால் எண்ணினன் பண்பு. 45

பண் புரிந்த நான்மறையோன் சென்னிப் பலி ஏற்ற
வெண் புரி நூல் மார்பன் வினை தீர, புண் புரிந்த
ஆகத்தான் தாள் பணிவார் கண்டீர்—அமரர்-தம்
போகத்தால் பூமி ஆள்வார். 46

வாரி சுருக்கி மதக் களிறு ஐந்தினையும்,
சேரி திரியாமல் செந்நிறீஇ, கூரிய
மெய்ஞ்ஞானத்தால் உணர்வார் காண்பரே—மேல் ஒருநாள்
கைந் நாகம் காத்தான் கழல். 47

கழல் ஒன்று எடுத்து, ஒரு கை சுற்றி, ஓர் கைமேல்
சுழலும் சுராசுரர்கள் அஞ்ச, அழலும்
செரு ஆழி ஏந்தினன் சேவடிக்கே செல்ல
மருவு, ஆழி நெஞ்சே! மகிழ். 48

மகிழ் அலகு ஒன்றே போல், மாறும் பல் யாக்கை
நெகிழ முயல்கிற்பார்க்கு அல்லால், முகிழ் விரிந்த
சோதிபோல் தோன்றும் சுடர் பொன் நெடு முடி எம்
ஆதி காண்பார்க்கும் அரிது. 49

அரிய புலன் ஐந்து அடக்கி, ஆய் மலர் கொண்டு, ஆர்வம்
புரிய பரிசினால் புல்கில், பெரியனாய்
மாற்றாது வீற்றிருந்த மாவலிபால் வண் கை நீர்
ஏற்றானைக் காண்பது எளிது. 50

எளிதில் இரண்டு அடியும் காண்பதற்கு, என் உள்ளம்!
தெளிய, தெளிந்தொழியும் செவ்வே; களியில்
பொருந்ாதவனைப் பொரல் உற்று, அரியாய்
இருந்தான் திருநாமம் எண். 51

எண்மர், பதினொருவர், ஈர்-அறுவர், ஓர் இருவர்
வண்ண மலர் ஏந்தி, வைகலும் நண்ணி,
ஒரு மாலையால் பரவி, ஓவாது, எப்போதும்,
திருமாலைக் கைதொழுவர் சென்று. 52

சென்றால் குடை ஆம்; இருந்தால் சிங்காசனம் ஆம்;
நின்றால் மரவடி ஆம்; நீள் கடலுள் என்றும்
புணை ஆம்; மணி விளக்கு ஆம்; பூம் பட்டு ஆம்; புல்கும்
அணை ஆம்—திருமாற்கு அரவு. 53

அரவம், அடல் வேழம், ஆன், குருந்தம், புள் வாய்,
குரவை, குடம், முலை, மல், குன்றம்—கரவு இன்றி,
விட்டு, இறுத்து, மேய்த்து, ஒசித்து, கீண்டு, கோத்து, ஆடி, உண்டு,
அட்டு, எடுத்த—செங்கண் அவன். 54

அவன் தமர் எவ் வினையர் ஆகிலும், எம் கோன்-
அவன் தமரே என்று ஒழிவது அல்லால், நமன் தமரால்
ஆராயப்பட்டு அறியார் கண்டீர்—அரவு-அணைமேல்
பேர் ஆயற்கு ஆட்பட்டார் பேர். 55

பேரே வரப் பிதற்றல் அல்லால், என் பெம்மானை
ஆரே அறிவார் ? அது நிற்க, நேரே
கடிக் கமலத்துள் இருந்தும் காண்கிலான்—கண்ணன்
அடிக்கமலம்-தன்னை அயன். 56

அயல் நின்ற வல் வினையை அஞ்சினேன் ; அஞ்சி,
உய, நின் திருவடியே சேர்வான், நயம் நின்ற
நல் மாலை கொண்டு, நமோ நாரணா என்னும்
சொல்-மாலை கற்றேன்—தொழுது. 57

தொழுது மலர் கொண்டு, தூபம் கை ஏந்தி,
எழுதும் ; எழு, வாழி, நெஞ்சே! பழுது இன்றி
மந்திரங்கள் கற்பனவும் மால் அடியே கைதொழுவான :
அந்தரம் ஒன்று இல்லை, அடை. 58

அடைந்த அரு வினையோடு அல்லல், நோய், பாவம்
மிடைந்தவை மீண்டு ஒழிய வேண்டில், நுடங்கு இடையை
முன் இலங்கை வைத்தான் முரண் அழிய, முன் ஒரு நாள்,
தன் வில் அங்கை வைத்தான் சரண். 59

சரண் மறை பயந்த தாமரையானோடு,
மரண் ஆய மன் உயிர்கட்கு எல்லாம் அரண் ஆய
பேர் ஆழி கொண்ட பிரான் அன்றி, மற்று அறியாது—
ஓர் ஆழி சூழ்ந்த உலகு. 60

உலகும், உலகு இறந்த ஊழியும், ஒண் கேழ்
விலகு கருங் கடலும், வெற்பும், உலகினில்
செந்தீயும், மாருதமும், வானும், திருமால்-தன்
புந்தியில் ஆய புணர்ப்பு. 61

புணர் மருதின் ஊடு போய், பூங் குருந்தம் சாய்த்து,
மணம் மருவ மால் விடை ஏழ் செற்று, கணம் வெருவ
ஏழ் உலகும் தாயினவும், எண் திசையும் போயினவும்—
சூழ் அரவப் பொங்கு அணையான் தோள். 62

தோள் அவனை அல்லால் தொழா ; என் செவி இரண்டும்
கேள்-அவனது இன் மொழியே கேட்டிருக்கும் ; நா நாளும்
கோள் நாகணையான் குரை கழலே கூறுவதே ;
நாணாமை நள்ளேன் நயம். 63

நயவேன் பிறர் பொருளை ; நள்ளேன் கீழாரோடு ;
உயவேன் உயர்ந்தவரோடு அல்லால் ; வியவேன் ;
திருமாலை அல்லது தெய்வம் என்று ஏத்தேன் ;
வரும் ஆறு என்—என்மேல் வினை ? 64

வினையால் அடர்ப்படார் ; வெம் நரகில் சேரார் ;
தினையேனும் தீக்கதிக்கண் செல்லார்—நினைதற்கு
அரியானை, சேயானை, ஆயிரம் பேர்ச் செங்கண்
கரியானைக் கைதொழுதக்கால். 65

காலை எழுந்து உலகம் கற்பனவும், கற்று உணர்ந்த
மேலைத் தலை மறையோர் வேட்பனவும், வேலைக்கண்
ஓர் ஆழியான் அடியே : ஓதுவதும், ஓர்ப்பனவும்—
பேர் ஆழி கொண்டான் பெயர். 66

பெயரும் கருங் கடலே நோக்கும்—ஆறு ; ஒண் பூ
உயரும் கதிரவனே நோக்கும் ; உயிரும்
தருமனையே நோக்கும் ; ஒண் தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கும்—உணர்வு. 67

உணர்வார் ஆர்—உன் பெருமை, ஊழிதோறு ஊழி ?
உணர்வார் ஆர்—உன் உருவம்-தன்னை ? உணர்வார் ஆர்—
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! நால்வேதப்
பண்ணகத்தாய்! நீ கிடந்த பால் ? 68

பாலன்-தனது உருவாய், ஏழ் உலகு உண்டு, ஆல் இலையின்-
மேல் அன்று நீ வளர்ந்த மெய் என்பர் ; ஆல் அன்று
வேலை நீர் உள்ளதோ ? விண்ணதோ ? மண்ணதோ ?
சோலை சூழ் குன்று எடுத்தாய்! சொல்லு. 69

சொல்லும்-தனையும்—தொழுமின், விழும் உடம்பு
செல்லும்-தனையும், திருமாலை நல் இதழ்த்
தாமத்தால், வேள்வியால், தந்திரத்தால், மந்திரத்தால்—
நாமத்தால் ஏத்துதிரேல், நன்று. 70

நன்று பிணி மூப்புக் கையகற்றி, நான்கு ஊழி
நின்று நிலம் முழுதும் ஆண்டாலும், என்றும்
விடல், ஆழி நெஞ்சமே! வேண்டினேன் கண்டாய்—
அடல் ஆழி கொண்டான்மாட்டு அன்பு. 71

அன்பு ஆழியானை அணுகு என்னும் : நா அவன்-தன்
பண்பு ஆழித் தோள் பரவி ஏத்து என்னும் : முன்பு ஊழி
காணானைக் காண் என்னும் கண் : செவி கேள் என்னும்—
பூண் ஆரம் பூண்டான் புகழ். 72

புகழ்வாய், பழிப்பாய், நீ பூந் துழாயானை ;
இகழ்வாய், கருதுவாய், நெஞ்சே!—திகழ் நீர்க்
கடலும், மலையும், இரு விசும்பும், காற்றும்,
உடலும், உயிரும் ஏற்றான். 73

ஏற்றான், புள் ஊர்ந்தான் ; எயில் எரித்தான், மார்வு இடந்தான்;
நீற்றான், நிழல் மணி வண்ணத்தான் ; கூற்று ஒருபால்
மங்கையான், பூமகளான் ; வார் சடையான், நீள் முடியான் ;
கங்கையான், நீள் கழலான்—காப்பு. 74

காப்பு உன்னை உன்னக் கழியும் ; அரு வினைகள்-
ஆப்பு உன்னை உன்ன அவிழ்ந்தொழியும் ; மூப்பு உன்னைச்
சிந்திப்பார்க்கு இல்லை ; திருமாலே! நின் அடியை
வந்திப்பார் காண்பர்—வழி. 75

வழி நின்று நின்னைத் தொழுவார் வழுவா
மொழி நின்ற மூர்த்தியரே ஆவர் : பழுது ஒன்றும்
வாராதவண்ணமே விண் கொடுக்கும்—மண் அளந்த
சீரான் திருவேங்கடம். 76

வேங்கடமும், விண்ணகரும், வெஃகாவும், அஃகாத
பூங் கிடங்கின் நீள் கோவல் பொன்-நகரும், நான்கு இடத்தும்
நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தானே
என்றால், கெடுமாம்—இடர். 77

இடர் ஆர் படுவார் ? எழு, நெஞ்சே! வேழம்
தொடர் வான் கொடு முதலை சூழ்ந்த படம் உடைய
பைந் நாகப் பள்ளியான் பாதமே கைதொழுதும்—
கொய்ந் நாகப் பூம் போது கொண்டு. 78

கொண்டானை அல்லால், கொடுத்தாரை யார் பழிப்பார் ?
மண் தா என இரந்து மாவலியை, ஒண் தாரை
நீர் அங்கை தோய, நிமிர்ந்திலையே—நீள் விசும்பில்
ஆரம் கை தோய, அடுத்து ? 79

அடுத்த கடும் பகைஞற்கு ஆற்றேன் என்று ஓடி,
படுத்த பெரும் பாழி சூழ்ந்த, விடத்து அரவை
வல்லாளன் கைக்கொடுத்த மா மேனி மாயவனுக்கு
அல்லாதும், ஆவரோ—ஆள் ? 80

ஆள் அமர் வென்றி அடு களத்துள் அந்நான்று,
வாள் அமர் வேண்டி, வரை நட்டு, நீள் அரவைச்
சுற்றிக் கடைந்தான் பெயர் அன்றே—தொல் நரகைப்
பற்றிக் கடத்தும் படை. 81

படை ஆரும் வாள் கண்ணார் பாரசி-நாள் பைம் பூந்
தொடையலோடு ஏந்திய தூபம், இடை இடையில்
மீன் மாய, மாசூணும் வேங்கடமே—மேல் ஒரு நாள்,
மான் மாய எய்தான் வரை. 82

வரை குடை, தோள் காம்பு ஆக, ஆ-நிரை காத்து, ஆயர்
நிரை விடை ஏழ் செற்ற ஆறு என்னே ? உரவு உடைய
நீர் ஆழியுள் கிடந்து, சேர் ஆம் நிசாசரர்மேல்
பேர் ஆழி கொண்ட பிரான் ! 83

பிரான் ! உன் பெருமை பிறர் ஆர் அறிவார் ?
உரா அய் உலகு அளந்த நான்று, வராகத்து
எயிற்று-அளவு போதா ஆறு என்கொலோ—எந்தை
அடிக்கு அளவு போந்த படி ? 84

படி கண்டு அறிதியே ? பாம்பு-அணையினன் புள்-
கொடி கண்டு அறிதியே ? கூறாய்—வடிவில்
பொறி ஐந்தும் உள் அடக்கி, போதொடு நீர் ஏந்தி,
நெறி நின்ற நெஞ்சமே ! நீ. 85

நீயும் திருமகளும் நின்றாயால்—குன்று எடுத்துப்
பாயும் பனி மறுத்த பண்பாளா !—வாசல்
கடை கழியா, உள் புகா, காமர் பூங் கோவல்
இடைகழியே பற்றி, இனி. 86

இனி, யார் புகுவார் எழு நரக வாசல் ?
முனியாது மூரித் தாள் கோமின் ; கனி சாயக்
கன்று எறிந்த தோளான் கனை கழலே காண்பதற்கு
நன்கு அறிந்த—நாவலம் சூழ் நாடு. 87

நாடிலும் நின் அடியே நாடுவன் ; நாள்தோறும்
பாடிலும் நின் புகழே பாடுவன் ; சூடிலும்
பொன் ஆழி ஏந்தினன் பொன் அடியே சூடுவேற்கு,
என் ஆகில் என்னே—எனக்கு ? 88

எனக்கு ஆவார் ஆர் ஒருவரே—எம் பெருமான்
தனக்கு ஆவான் தானே மற்று அல்லால் ? புனக் காயாம்-
பூ மேனி, காணப் பொதி அவிழும் பூவைப் பூ—
மா மேனி காட்டும், வரம். 89

வரத்தால் வலி நினைந்து, மாதவ ! நின் பாதம்
சிரத்தால் வணங்கானும் என்றே—உரத்தினால்
ஈர் அரியாய் நேர் வலியோன் ஆய இரணியனை,
ஓர் அரியாய், நீ இடந்தது ஊன் ? 90

ஊனக் குரம்பையின் உள் புக்கு, இருள் நீக்கி,
ஞானச் சுடர் கொளீஇ, நாள்தோறும், ஏனத்து
உருவாய் உலகு இடந்த ஊழியான் பாதம்
மருவாதார்க்கு உண்டாமோ—வான் ? 91

வான் ஆகி, தீ ஆய், மறி கடல் ஆய், மாருதம் ஆய்,
தேன் ஆகி, பால் ஆம் திருமாலே ! ஆன்-ஆய்ச்சி
வெண்ணெய் விழுங்க நிறையுமே—முன் ஒரு நாள்
மண்ணை உமிழ்ந்த வயிறு ? 92

வயிறு அழல, வாள் உருவி வந்தானை, அஞ்ச,
எயிறு இலக, வாய் மடுத்தது என் நீ—பொறி உகிரால்,
பூ வடிவை ஈடு அழித்த பொன் ஆழிக் கையா ! நின்
சேவடிமேல் ஈடு அழிய, செற்று ? 93

செற்று, எழுந்து தீவிழித்து, சென்ற இந்த ஏழுலகும்,
மற்று இவை, ஆ என்று வாய் அங்காந்து, முற்றும்
மறையவற்குக் காட்டிய மாயவனை அல்லால்,
இறையேனும் ஏத்தாது என் நா. 94

நா, வாயில் உண்டே ; நமோ நாரணா என்று
ஓவாது உரைக்கும் உரை உண்டே ; மூவாத
மாக் கதிக்கண் செல்லும் வகை உண்டே : என்—ஒருவர்
தீக் கதிக்கண் செல்லும் திறம் ? 95

திறம்பாது—என் நெஞ்சமே ! செங்கண் மால் கண்டாய்
அறம் பாவம் என்று இரண்டும் ஆவான் ; புறம் தான், இம்
மண் தான், மறிகடல் தான், மாருதம் தான், வான் தானே
கண்டாய்—கடைக்கண் பிடி. 96

பிடி சேர் களிறு அளித்த பேராளா ! உன்-தன்
அடி சேர்ந்து அருள் பெற்றாள் அன்றே—பொடி சேர்
அனற்கு அங்கை ஏற்றான் அவிர் சடைமேல் பாய்ந்த
புனல்-கங்கை என்னும் பேர்ப் பொன் ? 97

பொன் திகழும் மேனிப் புரி சடை அம் புண்ணியனும்,
நின்று உலகம் தாய நெடுமாலும், என்றும்
இருவர் அங்கத்தால் திரிவரேலும், ஒருவன்
ஒருவன் அங்கத்து என்றும் உளன். 98

உளன் கண்டாய், நல் நெஞ்சே ! உத்தமன் ; என்றும்
உளன் கண்டாய் ; உள்ளுவார் உள்ளத்து உளன் கண்டாய் ;
வெள்ளத்தின் உள்ளானும், வேங்கடத்து மேயானும்,
உள்ளத்தின் உள்ளான் என்று ஓர். 99

ஓர் அடியும், சாடு உதைத்த ஒண் மலர்ச் சேவடியும்,
ஈர் அடியும் காணலாம், என் நெஞ்சே !—ஓர் அடியில்
தாயவனை, கேசவனை, தண் துழாய் மாலை சேர்
மாயவனையே மனத்து வை. 100

முதல் திருவந்தாதி முற்றும்

ஸ்ரீ:

## பூதத்தாழ்வார் அருளிச்செய்த

# இரண்டாம் திருவந்தாதி

அன்பே தகளியா, ஆர்வமே நெய் ஆக,
இன்பு உருகு சிந்தை இடு திரியா, நன்பு உருகி,
ஞானச் சுடர்-விளக்கு ஏற்றினேன், நாரணற்கு—
ஞானத் தமிழ் புரிந்த நான். 1

ஞானத்தால் நன்கு உணர்ந்து நாரணன்-தன் நாமங்கள்,
தானத்தால் மற்று அவன் பேர் சாற்றினால், வானத்து
அணி அமரர் ஆக்குவிக்கும்-அஃது அன்றே—நங்கள்
பணி அமரர் கோமான் பரிசு. 2

பரிசு நறு மலரால் பாற்கடலான் பாதம்
புரிவார் புகப்பெறுவர் போலாம்—புரிவார்கள்
தொல் அமரர் கேள்வித் துலங்கு ஒளி சேர் தோற்றத்து
நல் அமரர் கோமான் நகர். 3

நகர் இழைத்து, நித்திலத்து நாள் மலர் கொண்டு, ஆங்கே
திகழும் மணி வயிரம் சேர்த்து, நிகர் இல்லாப்
பைங் கமலம் ஏந்திப் பணிந்தேன்—பனி மலராள்
அங்கம் வலம் கொண்டான் அடி. 4

அடி மூன்றில் இவ் உலகம் அன்று அளந்தாய் போலும்;
அடி மூன்று இரந்து அவனி கொண்டாய்: படிநின்ற
நீர் ஓத மேனி நெடுமாலே! நின் அடியை
யார் ஓத வல்லார்—அறிந்து ? 5

அறிந்து, ஐந்தும் உள் அடக்கி, ஆய் மலர் கொண்டு, ஆர்வம்
செறிந்த மனத்தராய், செவ்வே அறிந்து, அவன்-தன்
பேர் ஓதி ஏத்தும் பெருந்தவத்தோர் காண்பரே—
கார் ஓத வண்ணன் கழல். 6

கழல் எடுத்து, வாய் மடித்து, கண் சுழன்று, மாற்றார்
அழல் எடுத்த சிந்தையராய் அஞ்ச, தழல் எடுத்த
போர் ஆழி ஏந்தினான் பொன் மலர்ச் சேவடியை
ஓர், ஆழி நெஞ்சே!—உகந்து. 7

உகந்து, உன்னை வாங்கி, ஒளி நிறம் கொள் கொங்கை,
அகம் குளிர, உண் என்றாள் ஆவி உகந்து,
முலை உண்பாய் போலே, முனிந்து உண்டாய்—நீயும்
அலை பண்பால், ஆனமையால், அன்று. 8

அன்று, அதுகண்டு அஞ்சாத ஆய்ச்சி உனக்கு இரங்கி,
நின்று முலை தந்த இந் நீர்மைக்கு, அன்று
வரன்முறையால் நீ அளந்த மா கடல் சூழ் ஞாலம்
பெரு முறையால் எய்துமோ பேர்த்து ? 9

பேர்த்தனை மா சகடம் பிள்ளையாய் ; மண் இரந்து,
காத்தனை பல் உயிரும், காவலனே! ஏத்திய
நா உடையேன் ; பூ உடையேன் ; நின் உள்ளி நின்றமையால்,
கா—அடியேன் பட்ட கடை. 10

கடை நின்று அமரர், கழல் தொழுது, நாளும்
இடைநின்ற இன்பத்தர் ஆவர்—புடைநின்ற
நீர் ஓத மேனி நெடுமாலே! நின் அடியை
ஆர் ஓத வல்லார்-அவர் ? 11

அவர் இவர் என்று இல்லை ; அரவு-அணையான் பாதம்
எவர் வணங்கி ஏத்தாதார் ? எண்ணில், பவரும்
செழும் கதிரோன், ஒண் மலரோன்,கண்ணுதலோன்,அன்றே—
தொழும் தகையார் நாளும் தொடர்ந்து ? 12

தொடர் எடுத்த மால் யானை சூழ் கயம் புக்கு, அஞ்சி,
படர் எடுத்த பைங் கமலம் கொண்டு, அன்று இடர் அடுக்க,
ஆழியான் பாதம் பணிந்து அன்றே—வானவர்-கோன்
பாழி-தான் எய்திற்று, பண்டு ? 13

பண்டிப் பெரும் பதியை ஆக்கி, பழி பாவம்
கொண்டு, இங்கு வாழ்வாரைக் கூறாதே, எண் திசையும்
பேர்த்த கரம் நான்கு உடையான் பேர் ஓதி, பேதைகாள்!
தீர்த்தகரர் ஆமின்—திரிந்து. 14

திரிந்தது—வெம் சமத்துத் தேர் கடவி ; அன்று
பிரிந்தது—சீதையை மான் பின் போய் ; புரிந்ததுவும்
கண் பள்ளிகொள்ள—அழகியதே நாகத்தின்
தண் பள்ளி கொள்வான்-தனக்கு ? 15

தனக்கு அடிமை பட்டது தான் அறியானேலும்,
மனத்து அடைய வைப்பது ஆம் மாலை; வனத் திடரை
ஏரி ஆம் வண்ணம் இயற்றும் இது அல்லால்,
மாரி யார் பெய்கிற்பார் மற்று ? 16

மற்று ஆர் இயல் ஆவார்—வானவர்-கோன், மா மலரோன்
சுற்றும் வணங்கும் தொழிலானை, ஒற்றைப்
பிறை இருந்த செஞ்சடையான் பின் சென்று, மாலைக்
குறை இரந்து, தான் முடித்தான் கொண்டு ? 17

கொண்டது உலகம் குறள் உருவாய் ; கோளரியாய்
ஒண் திறலோன் மார்வத்து உகிர் வைத்தது ; உண்டதுவும்
தான் கடந்த ஏழ் உலகே : தாமரைக்கண் மால், ஒரு நாள்,
வான் கடந்தான், செய்த வழக்கு. 18

வழக்கு அன்று கண்டாய், வலி சகடம் செற்றாய் ;
வழக்கு என்று நீ மதிக்க வேண்டா—குழக் கன்று
தீ விளவின் காய்க்கு எறிந்த தீமை, திருமாலே!—
பார் விளங்கச் செய்தாய் பழி. 19

பழி பாவம் கையகற்றி, பல் காலும், நின்னை
வழிவாழ்வார் வாழ்வராம் மாதோ—வழு இன்றி
நாரணன்-தன் நாமங்கள் நன்கு உணர்ந்து, நன்கு ஏத்தும்
காரணங்கள்-தாம் உடையார்-தாம். 20

தாம் உளரே ; தம் உள்ளம் உள் உளதே ; தாமரையின்
பூ உளதே ; ஏத்தும் பொழுது உண்டே ; வாமன்
திரு மருவு தாள் மருவு சென்னியரே—செவ்வே
அரு நரகம் சேர்வது அரிது. 21

அரியது எளிது ஆகும், ஆற்றலால் மாற்றிப்
பெருக முயல்வாரைப் பெற்றால் : கரியது ஓர்
வெண் கோட்டு மால் யானை வென்றி முடித்தன்றே—
தண் கோட்டு மா மலரால், தாழ்ந்து ? 22

தாழ்ந்து, வரம் கொண்டு, தக்க வகைகளால்
வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும்—தாழ்ந்த
விளங் கனிக்குக் கன்று எறிந்து, வேற்று உருவாய் ஞாலம்
அளந்து, அடிக்கீழ்க் கொண்ட அவன். 23

அவன் கண்டாய், நல் நெஞ்சே! ஆர் அருளும் கேடும்;
அவன் கண்டாய் ஐம்புலனாய் நின்றான் : அவன் கண்டாய்
காற்று, தீ, நீர், வான், கரு வரை, மண், கார் ஓதச்
சீற்றத் தீ ஆவானும்—சென்று. 24

சென்றது இலங்கைமேல் செவ்வே; தன் சீற்றத்தால்
கொன்றது இராவணனை; கூறுங்கால், நின்றதுவும்
வேய் ஓங்கு தண் சாரல் வேங்கடமே—விண்ணவர்-தம்
வாய் ஓங்கு தொல் புகழான் வந்து. 25

வந்தித்து அவனை—வழி நின்ற ஐம்பூதம்,
ஐந்தும் அகத்து அடக்கி—ஆர்வமாய், உந்திப்
படி அமரர் வேலையான் பண்டு-அமரர்க்கு ஈந்த—
படி-அமரர் வாழும் பதி. 26

பதி அமைந்து, நாடி, பருத்து எழுந்த சிந்தை,
மதி உரிஞ்சி, வான் முகடு நோக்கி, கதி மிகுத்து, அம்
கோல் தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே—
மால் தேடி ஓடும் மனம். 27

மனத்து உள்ளான்—வேங்கடத்தான், மா கடலான், மற்றும்
நினைப்பு அரிய நீள் அரங்கத்து உள்ளான், எனைப் பலரும்
தேவாதி தேவன் எனப்படுவான், முன் ஒரு நாள்
மா வாய் பிளந்த மகன். 28

மகனாகக் கொண்டு எடுத்தாள் மாண்பு ஆய கொங்கை
அகன் ஆர உண்பன் என்று உண்டு, மகனைத் தாய்
தேறாத வண்ணம் திருத்தினாய்—தென் இலங்கை
நீறு ஆக எய்து அழித்தாய் நீ! 29

நீ அன்று உலகு அளந்தாய், நீண்ட திருமாலே!
நீ அன்று உலகு இடந்தாய் என்பரால் : நீ அன்று
கார் ஓதம் முன் கடைந்து, பின் அடைத்தாய் மா கடலை—
பேர் ஓத மேனிப் பிரான்! 30

பிரான் என்றும், நாளும் பெரும் புலரி என்றும்,
குரா நல் செழும் போது கொண்டு, வராகத்து
அணி உருவன் பாதம் பணியும்-அவர் கண்டீர்
மணி உருவம் காண்பார்—மகிழ்ந்து. 31

மகிழ்ந்தது சிந்தை, திருமாலே! மற்றும்
மகிழ்ந்தது, உன் பாதமே போற்றி; மகிழ்ந்தது
அழல் ஆழி சங்கம் அவை பாடி; ஆடும்
தொழில் ஆகம்—சூழ்ந்து, துணிந்து. 32

துணிந்தது—சிந்தை, துழாய் அலங்கல் அங்கம்
அணிந்தவன் பேர், உள்ளத்துப் பல்கால் : பணிந்ததுவும்—
வேய் பிறங்கு சாரல் விறல் வேங்கடவனையே :
வாய்—திறங்கள் சொல்லும் வகை. 33

வகையால் அவனி இரந்து அளந்தாய் பாதம்
புகையால், நறு மலரால், முன்னே மிக வாய்ந்த
அன்பு ஆக்கி, ஏத்தி, அடிமைப்பட்டேன் உனக்கு—
என் பாக்கியத்தால், இனி. 34

இனிது என்பர் காமம்; அதனிலும் ஆற்ற
இனிது என்பர் தண்ணீரும்; எந்தாய்! இனிது என்று
காமம், நீர் வேளாது, நின் பெருமை வேட்பரேல்,
சேம நீர் ஆகும்—சிறிது. 35

சிறியார் பெருமை சிறிதின்கண் எய்தும்;
அறியாரும் தாம் அறியார் ஆவர்; அறியாமை,
மண் கொண்டு, மண் உண்டு, மண் உமிழ்ந்த மாயன் என்று
எண் கொண்டு, என் நெஞ்சே! இரு. 36

இரும் தண் கமலத்து இரு மலரின் உள்ளே,
திருந்து திசைமுகனைத் தந்தாய்! பொருந்திய நின்
பாதங்கள் ஏத்திப் பணியாவேல், பல் பிறப்பும்
ஏதங்கள்—எல்லாம், எமக்கு. 37

எமக்கு என்று இரு நிதியம் ஏமாந்து இராதே,
தமக்கு என்றும் சார்வம் அறிந்து, நமக்கு என்றும்
மாதவனே என்னும் மனம் படைத்து, மற்று அவன் பேர்
ஓதுவதே நாவினால் ஓத்து. 38

ஓத்தின் பொருள் முடிவும் இத்தனையே—உத்தமன் பேர்
ஏத்தும் திறம் : அறிமின், ஏழைகாள்! ஓத்து-அதனை
வல்லீரேல் : நன்று அதனை மாட்டீரேல், மாதவன் பேர்
சொல்லுவதே ஓத்தின் சுருக்கு. 39

சுருக்காக வாங்கி, சுலாவி நின்று, ஐயார்
நெருக்கா முன், நீர் நினைமின் கண்டீர்—திருப் பொலிந்த
ஆகத்தான் பாதம் : அறிந்தும் அறியாத
போகத்தால் இல்லை—பொருள். 40

பொருளால் அமர் உலகம் புக்கு இயலல் ஆகாது ;
அருளால் அறம் அருளும் அன்றே ; அருளாலே
மா மறையோர்க்கு ஈந்த மணிவண்ணன் பாதமே
நீ மறவேல், நெஞ்சே !—நினை. 41

நினைப்பன் திருமாலை, நீண்ட தோள் காண ;
நினைப்பார் பிறப்பு ஒன்றும் நேரார் ; மனைப்பால்
பிறந்தார் பிறந்து எய்தும் பேரின்பம் எல்லாம்
துறந்தார்—தொழுதார் அத் தோள். 42

தோள் இரண்டு எட்டு ஏழும் மூன்றும், முடி அனைத்தும்,
தாள் இரண்டும் வீழச் சரம் துரந்தான் தாள் இரண்டும்
ஆர் தொழுவார் பாதம்-அவை தொழுவது அன்றே—என்
சீர் கெழு தோள் செய்யும் சிறப்பு. 43

சிறந்தார்க்கு எழு துணையாம் செங்கண் மால் நாமம்
மறந்தாரை மானிடமா வையேன் ; அறம் தாங்கும்
மாதவனே என்னும் மனம் படைத்து, மற்று அவன் பேர்
ஓதுவதே நாவினால்—உள்ளு. 44

உளது என்று இறுமாவார் ; உண்டு, இல்லை என்று
தளர்தல்-அதன் அருகும் சாரார்—அளவு அரிய
வேதத்தான், வேங்கடத்தான், விண்ணோர் முடி தோயும்
பாதத்தான் பாதம் பயின்று. 45

பயின்றது அரங்கம், திருக்கோட்டி ; பல் நாள்
பயின்றதுவும் வேங்கடமே ; பல்நாள் பயின்றது
அணி திகழும் சோலை அணி நீர் மலையே—
மணி திகழும் வண் தடக்கை மால். 46

மாலை அரி-உருவன் பாதமலர் அணிந்து,
காலை தொழுது எழுமின், கைகோலி—ஞாலம்
அளந்து, இடந்து, உண்டு, உமிழ்ந்த அண்ணலை, மற்று அல்லால்
உளம் கிடந்த ஆற்றால் உணர்ந்து. 47

உணர்ந்தாய் மறை நான்கும்; ஓதினாய் நீதி;
மணந்தாய் மலர்-மகள் தோள்; மாலே! மணந்தாய் போய்—
வேய் இரும் சாரல், வியல் இரு ஞாலம் சூழ்,
மா இரும் சோலை மலை. 48

மலை ஏழும், மா நிலங்கள் ஏழும், அதிர—
குலை சூழ் குரை கடல்கள் ஏழும்; முலை சூழ்ந்த
நஞ்சு உரத்துப் பெண்ணை நவின்று உண்ட நாவன் என்று
அஞ்சாது, என் நெஞ்சே! அழை. 49

அழைப்பன் திருமாலை—ஆங்கு அவர்கள் சொன்ன
பிழைப்பு இல் பெரும் பெயரே பேசி, இழைப்பு அரிய
ஆயவனே! யாதவனே! என்றவனை யார் முகப்பும்
மாயவனே! என்று மதித்து. 50

மதிக் கண்டாய், நெஞ்சே! மணிவண்ணன் பாதம்;
மதிக் கண்டாய் மற்று அவன் பேர்-தன்னை; மதிக் கண்டாய்—
பேர் ஆழிநின்று பெயர்ந்து, கடல் கடைந்த
நீர்-ஆழி வண்ணன் நிறம். 51

நிறம் கரியன்; செய்ய நெடு மலராள் மார்வன்;
அறம் பெரியன்; ஆர் அது அறிவார்—மறம் புரிந்த
வாள் அரக்கன் போல்வானை வானவர்-கோன் தானத்து
நீள் இருக்கைக்கு உய்த்தான் நெறி? 52

நெறியார் குழல் கற்றை முன்நின்று பின் தாழ்ந்து
அறியாது, இளங் கிரி என்று எண்ணி, பிரியாது,
பூங்கொடிக்கள் வைகும் பொரு புனல் குன்று என்னும்
வேங்கடமே—யாம் விரும்பும் வெற்பு. 53

வெற்பு என்று இரும் சோலை, வேங்கடம் என்று இவ் இரண்டும்
நிற்பு என்று நீ மதிக்கும் நீர்மை போல், நிற்பு என்று
உளம்-கோயில் உள்ளம் வைத்து உள்ளினேன்—வெள்ளத்து
இளங் கோயில் கைவிடேல் என்று. 54

என்றும் மறந்தறியேன், எழ் பிறப்பும், எப்பொழுதும்,
நின்று நினைப்பு ஒழியா நீர்மையால்—வென்றி
அடல் ஆழி கொண்ட அறிவனே!—இன்பக்
கடல்-ஆழி நீ அருளிக் காண். 55

காணக் கழி காதல் கைமிக்குக் காட்டினால்,
நாணப்படும் என்றால், நாணுமே ? பேணி,
கரு மாலைப் பொன் மேனி காட்டாமுன், காட்டும்—
திருமாலை நங்கள் திரு. 56

திருமங்கை நின்றருளும் தெய்வம் நா வாழ்த்தும்
கருமம் கடைப்பிடிமின் கண்டீர் : உரிமையால்
ஏத்தினேம் பாதம், இருந் தடக்கை எந்தை பேர்—
நால்-திசையும் கேட்டீரே ?—நாம். 57

நாம் பெற்ற நன்மையும்—நா-மங்கை நல் நெஞ்சத்து
ஓம்பி இருந்து, எம்மை ஓதுவித்து, வேம்பின்
பொருள் நீர்மை ஆயினும், பொன் ஆழி பாடு என்று
அருள் நீர்மை தந்த அருள். 58

அருள் புரிந்த சிந்தை அடியார்மேல் வைத்து,
பொருள் தெரிந்து, காண்குற்ற அப்போது, இருள் திரிந்து
நோக்கினேன் ; நோக்கி, நினைந்தேன் அது ஒண் கமலம் ;
ஓக்கினேன் என்னையும், அங்கு ஓர்ந்து. 59

ஓர் உருவன் அல்லை ; ஒளி உருவம் நின் உருவம் ;
ஈர் உருவன் என்பர் இரு நிலத்தோர் ; ஓர் உருவம்
ஆதியாம் வண்ணம் அறிந்தார்-அவர் கண்டீர்
நீதியால் மண் காப்பார், நின்று. 60

நின்றது ஓர் பாதம் நிலம் புதைப்ப, நீண்ட தோள்
சென்று அளந்தது என்பர் திசை எல்லாம்—அன்று
கரு மாணியாய் இரந்த கள்வனே !—உன்னைப்
பிரமாணித்தார் பெற்ற பேறு. 61

பேறு ஒன்றும் முன் அறியேன் ; பெற்று அறியேன் பேதைமையால் ;
மாறு என்று சொல்லி வணங்கினேன்—ஏறின்
பெருத்தெருத்தம், கோடு ஒசிய, பெண் நசையின் பின் போய்,
எருத்து இறுத்த நல்-ஆயர் ஏறு. 62

ஏறு ஏழும் வென்று அடர்த்த எந்தை எரி உருவத்து
ஏறு ஏறி பட்ட இடுசாபம் பாறு ஏறி
உண்ட தலை வாய் நிறைய, கோட்டு அம் கை ஒண் குருதி
கண்ட பொருள் சொல்லின், கதை. 63

கதையின் பெரும் பொருளும், கண்ணா! நின் பேரே,
இதயம் இருந்தவையே ஏத்தில் : கதையின்
திருமொழியாய் நின்ற திருமாலே! உன்னைப்
பரு மொழியால் காணப் பணி. 64

பணிந்தேன் திருமேனி ; பைங் கமலம் கையால்
அணிந்தேன், உன் சேவடிமேல், அன்பாய் : துணிந்தேன்—
புரிந்து ஏத்தி உன்னை, புகலிடம் பார்த்து, ஆங்கே
இருந்து ஏத்தி வாழும் இது. 65

இது கண்டாய், நல் நெஞ்சே! இப் பிறவி ஆவது ;
இது கண்டாய் எல்லாம் நாம் உற்றது ; இது கண்டாய்
நாரணன் பேர் ஓதி, நரகத்து அருகு அணையாக்
காரணமும் ; வல்லையேல், காண். 66

கண்டேன் திருமேனி யான் கனவில் ; ஆங்கு அவன் கைக்
கண்டேன் கனலும் சுடர் ஆழி ; கண்டேன்—
உறு நோய் வினை இரண்டும் ஓட்டுவித்து, பின்னும்,
மறு நோய் செறுவான் வலி. 67

வலி மிக்க வாள் எயிற்று வாள் அவுணர் மாள,
வலி மிக்க வாள் வரை மத்து ஆக, வலி மிக்க
வாள் நாகம் சுற்றி, மறுகக் கடல் கடைந்தான்—
கோள் நாகம் கொம்பு ஒசித்த கோ. 68

கோ ஆகி, மா நிலம் காத்து, நம் கண் முகப்பே
மா ஏகிச் செல்கின்ற மன்னவரும்—பூ மேவும்
செங் கமல நாபியான் சேவடிக்கே, ஏழ் பிறப்பும்,
தண் கமலம் ஏய்ந்தார் தமர். 69

தமர் உள்ளம், தஞ்சை, தலை அரங்கம், தண்கால்,
தமர் உள்ளும் தண் பொருப்பு, வேலை, தமர் உள்ளும்
மாமல்லை, கோவல், மதிள் குடந்தை என்பரே—
ஏ வல்ல எந்தைக்கு இடம். 70

இடங்கை வலம்புரி நின்று ஆர்ப்ப, எரி கான்று,
அடங்கார் ஒடுங்குவித்தது ஆழி—விடம் காலும்
தீ வாய் அரவு-அணைமேல் தோன்றல், திசை அளப்பான்,
பூ ஆர் அடி நிமிர்த்த போது. 71

அன்னவனை, அட்ட புயகரத்து எம்மான் ஏற்றை,
என்னை மனம் கவர்ந்த ஈசனை—வானவர்-தம் 70
முன்னவனை, மூழிக்களத்து விளக்கினை,
அன்னவனை, ஆதனூர் ஆண்டு அளக்கும் ஐயனை,
நென்னலை, இன்றினை, நாளையை—நீர்மலைமேல் 71
மன்னும் மறை நான்கும் ஆனானை, புல்லாணித்
தென்னன் தமிழை, வடமொழியை—நாங்கூரில் 72
மன்னும் மணிமாடக்கோயில் மணாளனை,
நல் நீர் தலைச்சங்க நாள் மதியை—நான் வணங்கும் 73
கண்ணனை, கண்ணபுரத்தானை, தென் நறையூர்
மன்னும் மணிமாடக்கோயில் மணாளனை,
கல் நவில் தோள் காளையைக் கண்டு, ஆங்குக் கைதொழுது,
என் நிலைமை எல்லாம் அறிவித்தால், எம் பெருமான்
தன் அருளும் ஆகமும் தாரானேல்—தன்னை நான் 74
மின் இடையார் சேரியிலும், வேதியர்கள் வாழ்விடத்தும்,
தன் அடியார் முன்பும், தரணி முழுது ஆளும்
கொல் நவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும், நாட்டகத்தும்,
தன் நிலைமை எல்லாம் அறிவிப்பன்—தான் முன நாள் 75
மின் இடை ஆய்ச்சியர்-தம் சேரிக் களவின்கண்
துன்னு படல் திறந்து புக்கு—தயிர் வெண்ணெய் 76
தன் வயிறு ஆர விழுங்க, கொழுங் கயல்-கண்
மன்னு மடவோர்கள் பற்றி, ஓர் வான் கயிற்றால்
பின்னும் உரலோடு கட்டுண்ட பெற்றிமையும்,
அன்னது ஓர் பூதமாய், ஆயர் விழவின்கண்,
துன்னு சகடத்தால் புக்க பெருஞ் சோற்றை
முன் இருந்து, முற்ற, தான் துற்றிய தெற்றெனவும்,
மன்னர் பெருஞ் சவையுள் வாழ் வேந்தர் தூதனாய்த்
தன்னை இகழ்ந்து உரைப்ப, தான் முன நாள் சென்றதுவும்,
மன்னு பறை கறங்க, மங்கையர்-தம் கண் களிப்ப,
கொல் நவிலும் கூத்தனாய், பேர்த்தும் குடம் ஆடி,
என் இவன் என்னப்படுகின்ற ஈடறவும்,
தென் இலங்கையாட்டி, அரக்கர் குலப் பாவை,
மன்னன் இராவணன்-தன் நல் தங்கை—வாள் எயிற்றுத் 77
துன்னு சுடு சினத்துச் சூர்ப்பணகா சோர்வு எய்தி,
பொன் நிறம் கொண்டு, புலர்ந்து எழுந்த காமத்தால்
தன்னை நயந்தாளைத் தான் முனிந்து, மூக்கு அரிந்து
மன்னிய திண்ணெனவும், வாய்த்த மலை போலும்,

தன் நிகர் ஒன்று இல்லாத தாடகையை—மா முனிக்கா, 78
தென் உலகம் ஏற்றுவித்த திண் திறலும்—மற்று இவைதான் 79
உன்னி உலவா : உலகு அறிய ஊர்வன் நான்,
முன்னி முளைத்து எழுந்து ஓங்கி ஒளி பரந்த,
மன்னிய பூம் பெண்ணை மடல். 80

பெரிய திருமடல் முற்றும்

ஸ்ரீ:

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த

# இராமாநுச நூற்றந்தாதி

பூ மன்னு மாது பொருந்திய மார்பன் புகழ் மலிந்த
பா மன்னு மாறன் அடி பணிந்து உய்ந்தவன், பல் கலையோர்
தாம் மன்ன வந்த இராமாநுசன் சரணாரவிந்தம்
நாம் மன்னி வாழ, நெஞ்சே! சொல்லுவோம், அவன் நாமங்களே. 1

கள் ஆர் பொழில் தென் அரங்கன் கமலப் பதங்கள் நெஞ்சில்
கொள்ளா மனிசரை நீங்கி, குறையல் பிரான் அடிக்கீழ்
விள்ளாத அன்பன் இராமாநுசன் மிக்க சீலம் அல்லால்,
உள்ளாது என் நெஞ்சு; ஒன்று அறியேன், எனக்கு உற்ற பேர் இயல்வே. 2

பேர் இயல் நெஞ்சே! அடி பணிந்தேன், உன்னை—பேய்ப் பிறவிப்
பூரியரோடு உள்ள சுற்றம் புலர்த்தி, பொருவு-அரும் சீர்
ஆரியன், செம்மை இராமாநுசமுனிக்கு அன்பு செய்யும்
சீரிய பேறு உடையார் அடிக்கீழ் என்னைச் சேர்த்ததற்கே. 3

என்னைப் புவியில் ஒரு பொருள் ஆக்கி, மருள் சுரந்த
முன்னைப் பழவினை வேர் அறுத்து, ஊழி முதல்வனையே
பன்னப் பணித்த இராமாநுசன் பரன் பாதமும் என்
சென்னித் தரிக்க வைத்தான்—எனக்கு ஏதும் சிதைவு இல்லையே. 4

எனக்கு உற்ற செல்வம் இராமாநுசன் என்று, இசையகில்லா
மனக் குற்ற மாந்தர் பழிக்கில், புகழ்; அவன் மன்னிய சீர்-
தனக்கு உற்ற அன்பர் அவன் திருநாமங்கள் சாற்றும் என் பா-
இனக் குற்றம் காணகில்லார்—பத்தி எய்ந்த இயல் இது என்றே. 5

இயலும் பொருளும் இசையத் தொடுத்து, ஈன் கவிகள் அன்பால்
மயல் கொண்டு வாழ்த்தும் இராமாநுசனை, மதி இன்மையால்,
பயிலும் கவிகளில் பத்தி இல்லாத என் பாவி நெஞ்சால்
முயல்கின்றனன்—அவன்-தன் பெருங் கீர்த்தி மொழிந்திடவே. 6

மொழியைக் கடக்கும் பெரும் புகழான், வஞ்ச முக்குறும்பு ஆம்
குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண் கூடியபின்,
பழியைக் கடத்தும் இராமாநுசன் புகழ் பாடி, அல்லா
வழியைக் கடத்தல் எனக்கு இனி யாதும் வருத்தம் அன்றே. 7

வருத்தும் புற இருள் மாற்ற, எம் பொய்கைப் பிரான் மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ்-தன்னையும் கூட்டி, ஒன்றத்
திரித்து, அன்று, எரித்த திருவிளக்கைத் தன் திருவுளத்தே
இருத்தும் பரமன், இராமாநுசன், எம் இறையவனே. 8

இறைவனைக் காணும் இதயத்து இருள் கெட, ஞானம் என்னும்
நிறை விளக்கு ஏற்றிய பூதத் திருவடி தாள்கள் நெஞ்சத்து
உறைய வைத்து ஆளும் இராமாநுசன் புகழ் ஓதும் நல்லோர்
மறையினைக் காத்து, இந்த மண்ணகத்தே மன்ன வைப்பவரே. 9

மன்னிய பேர் இருள் மாண்டபின், கோவலுள் மா மலராள்-
தன்னொடும் ஆயனைக் கண்டமை காட்டும் தமிழ்த் தலைவன்
பொன் அடி போற்றும் இராமாநுசற்கு அன்பு பூண்டவர் தாள்
சென்னியில் சூடும் திருவுடையார் என்றும் சீரியரே. 10

சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமிழால் அளித்த
பார் இயலும் புகழ்ப் பாண்பெருமாள் சரண் ஆம் பதுமத்
தார் இயல் சென்னி இராமாநுசன்-தன்னைச் சார்ந்தவர்-தம்
கார் இயல் வண்மை என்னால் சொல்லொணாது—இக் கடல்-இடத்தே. 11

இடம் கொண்ட கீர்த்தி மழிசைக்கு இறைவன் இணை-அடிப்போது
அடங்கும் இதயத்து இராமாநுசன் அம் பொன் பாதம், என்றும்,
கடம் கொண்டு இறைஞ்சும் திரு முனிவர்க்கு அன்றி, காதல் செய்யாத்
திடம் கொண்ட ஞானியர்க்கே அடியேன் அன்பு செய்வதுவே. 12

செய்யும் பசுந் துளபத் தொழில் மாலையும், செந்தமிழில்
பெய்யும் மறைத் தமிழ்-மாலையும், பேராத சீர் அரங்கத்து
ஐயன் கழற்கு அணியும் பரன் தாள் அன்றி, ஆதரியா
மெய்யன் இராமாநுசன் சரணே கதி—வேறு எனக்கே. 13

கதிக்குப் பதறி, வெம் கானமும் கல்லும் கடலும் எல்லாம்
கொதிக்கத் தவம் செய்யும் கொள்கை அற்றேன்—கொல்லி காவலன் சொல்
பதிக்கும் கலைக் கவி பாடும் பெரியவர் பாதங்களே
துதிக்கும் பரமன் இராமாநுசன் என்னைச் சோர்விலனே. 14

சோராத காதல் பெருஞ் சுழிப்பால் தொல்லை மாலை ஒன்றும்
பாராது, அவனைப் பல்லாண்டு என்று காப்பிடும் பான்மையன் தாள்
பேராத உள்ளத்து இராமாநுசன்-தன் பிறங்கிய சீர்
சாரா மனிசரைச் சேரேன்—எனக்கு என்ன தாழ்வு இனியே? 15

தாழ்வு ஒன்று இல்லா மறை தாழ்ந்து, தலம் முழுதும் கலியே
ஆள்கின்ற நாள் வந்து அளித்தவன் காண்மின்—அரங்கர் மௌலி
சூழ்கின்ற மாலையைச் சூடிக் கொடுத்தவள் தொல் அருளால்
வாழ்கின்ற வள்ளல் இராமாநுசன் என்னும் மா முனியே. 16

முனியார், துயரங்கள் முந்திலும்; இன்பங்கள் மொய்த்திடினும்
கனியார் மனம்—கண்ணமங்கை நின்றானை, கலை பரவும்
தனி ஆனையை, தண் தமிழ் செய்த நீலன்-தனக்கு உலகில்
இனியானை, எங்கள் இராமாநுசனை, வந்து எய்தினரே. 17

எய்தற்கு அரிய மறைகளை ஆயிரம் இன் தமிழால்
செய்தற்கு உலகில் வரும் சடகோபனைச் சிந்தையுள்ளே
பெய்தற்கு இசையும் பெரியவர் சீரை, உயிர்கள் எல்லாம்
உய்தற்கு, உதவும் இராமாநுசன் எம் உறு துணையே. 18

உறு பெருஞ் செல்வமும், தந்தையும், தாயும், உயர் குருவும்,
வெறி தரு பூமகள் நாதனும், மாறன் விளங்கிய சீர்
நெறி தரும் செந்தமிழ் ஆரணமே என்று, இந் நீள் நிலத்தோர்
அறிதர நின்ற இராமாநுசன் எனக்கு ஆர்-அமுதே. 19

ஆரப் பொழில் தென் குருகைப்பிரான் அமுதத் திருவாய்
ஈரத் தமிழின் இசை உணர்ந்தோர்கட்கு இனியவர்-தம்
சீரைப் பயின்று, உய்யும் சீலம்கொள் நாதமுனியை நெஞ்சால்
வாரிப் பருகும் இராமாநுசன் என்-தன் மா நிதியே. 20

நிதியைப் பொழியும் முகில் என்று, நீசர்—தம் வாசல் பற்றி,
துதி கற்று, உலகில் துவள்கின்றிலேன் இனி—தூய் நெறி சேர்
எதிகட்கு இறைவன், யமுனைத்துறைவன் இணை-அடியாம்
கதி பெற்றுடைய இராமாநுசன் என்னைக் காத்தனனே. 21

கார்த்திகையானும், கரிமுகத்தானும், கனலும், முக்கண்-
மூர்த்தியும், மோடியும், வெப்பும் முதுகிட்டு, மூவுலகும்
பூத்தவனே! என்று போற்றிட, வாணன் பிழை பொறுத்த
தீர்த்தனை ஏத்தும் இராமாநுசன் என்-தன் சேம வைப்பே. 22

வைப்பு ஆய வான் பொருள் என்று, நல் அன்பர் மனத்தகத்தே
எப்போதும் வைக்கும் இராமாநுசனை இரு நிலத்தில்
ஒப்பார் இலாத உறு வினையேன் வஞ்ச நெஞ்சில் வைத்து,
முப்போதும் வாழ்த்துவன்—என் ஆம் இது, அவன் மொய் புகழ்க்கே? 23

மொய்த்த வெம் தீவினையால், பல் உடல்தொறும், மூத்து, அதனால்
எய்த்து ஒழிந்தேன் முனை நாள்கள் எல்லாம்; இன்று கண்டு உயர்ந்தேன்—
பொய்த் தவம் போற்றும் புலைச் சமயங்கள் நிலத்து அவியக்
கைத்த மெய்ஞ்ஞானத்து இராமாநுசன் என்னும் கார்-தன்னையே. 24

கார் ஏய் கருணை இராமாநுச! இக் கடலிடத்தில்
ஆரே அறிபவர் நின் அருளின் தன்மை ? அல்லலுக்கு
நேரே உறைவிடம் நான் ; வந்து நீ என்னை உய்த்தபின், உன்
சீரே உயிர்க்கு உயிராய் அடியேற்கு இன்று தித்திக்குமே. 25

திக்கு உற்ற கீர்த்தி இராமாநுசனை, என் செய் வினை ஆம்
மெய்க் குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை, மேவும் நல்லோர்
எக் குற்றவாளர், எது பிறப்பு, ஏது இயல்வு ஆக நின்றோர்,
அக் குற்றம், அப் பிறப்பு, அவ் இயல்வே—நம்மை ஆட்கொள்ளுமே. 26

கொள்ளக் குறைவு அற்று இலங்கி, கொழுந்து விட்டு ஓங்கிய உன்
வள்ளல்-தனத்தினால் வல்வினையேன் மனம் நீ புகுந்தாய் ;
வெள்ளைச் சுடர் விடும் உன் பெரு மேன்மைக்கு இழுக்கு இது என்று,
தள்ளுற்று இரங்கும், இராமாநுச ! என் தனி நெஞ்சமே. 27

நெஞ்சில் கறை கொண்ட கஞ்சனைக் காய்ந்த நிமலன், நங்கள்
பஞ்சித் திருவடிப் பின்னை-தன் காதலன், பாதம் நண்ணா
வஞ்சர்க்கு அரிய இராமாநுசன் புகழ் அன்றி, என் வாய்
கொஞ்சிப் பரவகில்லாது ; என்ன வாழ்வு இன்று கூடியதே ! 28

கூட்டும் விதி என்று கூடுங்கொலோ—தென் குருகைப்பிரான்
பாட்டு என்னும் வேதப் பசுந்தமிழ்-தன்னை, தன் பத்தி என்னும்
வீட்டின் கண் வைத்த இராமாநுசன் புகழ் மெய் உணர்ந்தோர்
ஈட்டங்கள்-தன்னை என் நாட்டங்கள் கண்டு, இன்பம் எய்திடவே? 29

இன்பம் தரு பெரு வீடு வந்து எய்தில் என் ? எண் இறந்த
துன்பம் தரு நிரயம் பல சூழில் என் ?—தொல் உலகில்
மன் பல் உயிர்கட்கு இறையவன் மாயன் என மொழிந்த
அன்பன், அனகன், இராமாநுசன் என்னை ஆண்டனனே ! 30

ஆண்டுகள், நாள், திங்கள் ஆய், நிகழ் காலம் எல்லாம், மனமே !
ஈண்டு பல் யோனிகள்தோறு உழல்வோம் இன்று ஓர் எண் இன்றியே,
காண் தகு தோள் அண்ணல் தென் அத்தி ஊரர் கழல்-இணைக்கீழ்ப்
பூண்ட அன்பாளன் இராமாநுசனைப் பொருந்தினமே. 31

பொருந்திய தேசும், பொறையும், திறலும், புகழும், நல்ல
திருந்திய ஞானமும், செல்வமும் சேரும்—செறு கலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்து எடுத்து அளித்த
அருந் தவன் எங்கள் இராமாநுசனை அடைபவர்க்கே. 32

அடை ஆர் கமலத்து அலர்மகள் கேள்வன் கை ஆழி என்னும்
படையோடு நாந்தகமும், படர் தண்டும், ஒண் சார்ங்க வில்லும்
புடை ஆர் புரி சங்கமும், இந்தப் பூதலம் காப்பதற்கு என்று
இடையே இராமாநுசமுனி ஆயின—இந் நிலத்தே! 33

நிலத்தைச் செறுத்து உண்ணும் நீசக் கலியை நினைப்பு-அரிய
பெலத்தைச் செறுத்தும் பிறங்கியது இல்லை; என் பெய் வினை தென்-
புலத்தில் பொறித்த அப் புத்தகச் சும்மை பொறுக்கிய பின்,
நலத்தைப் பொறுத்தது—இராமாநுசன்-தன் நயப் புகழே. 34

நயவேன் ஒரு தெய்வம்; நானிலத்தே சில மானிடத்தைப்
புயலே எனக் கவி போற்றி செய்யேன்; பொன் அரங்கம் என்னில்,
மயலே பெருகும் இராமாநுசன் மன்னு மா மலர்த்தாள்
அயரேன்; அருவினை என்னை எவ்வாறு இன்று அடர்ப்பதுவே? 35

அடல் கொண்ட நேமியன், ஆர் உயிர் நாதன், அன்று, ஆரணச் சொல்-
கடல் கொண்ட ஒண் பொருள் கண்டு அளிப்ப, பின்னும் காசினியோர்
இடரின்கண் வீழ்ந்திடத் தானும் அவ் ஒண்பொருள் கொண்டு, அவர் பின்
படரும் குணன்: எம் இராமாநுசன்-தன் படி இதுவே. 36

படி கொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பத்தி வெள்ளம்
குடி கொண்ட கோயில் இராமாநுசன் குணம் கூறும் அன்பர்
கடி கொண்ட மா மலர்த் தாள் கலந்து உள்ளம் கனியும் நல்லோர்
அடி கண்டு கொண்டு உகந்து, என்னையும் ஆள் அவர்க்கு ஆக்கினரே. 37

ஆக்கி அடிமை நிலைப்பித்தனை என்னை இன்று; அவமே
போக்கிப் புறத்திட்டது என் பொருளா, முன்பு? புண்ணியர்-தம்
வாக்கில் பிரியா இராமாநுச! நின் அருளின் வண்ணம்
நோக்கில், தெரிவு அரிதால்; உரையாய், இந்த நுண் பொருளே. 38

பொருளும், புதல்வரும், பூமியும், பூங்குழலாரும் என்றே
மருள் கொண்டு இளைக்கும் நமக்கு, நெஞ்சே! மற்று உளார் தரமோ—
இருள் கொண்ட வெம் துயர் மாற்றி, தன் ஈறு இல் பெரும் புகழே
தெருளும் தெருள் தந்து, இராமாநுசன் செய்யும் சேமங்களே? 39

சேம நல் வீடும், பொருளும், தருமமும், சீரிய நல்
காமமும் என்று இவை நான்கு என்பர்: நான்கினும் கண்ணனுக்கே
ஆம் அது காமம்; அறம், பொருள், வீடு இதற்கு என்று உரைத்தான்—
வாமனன் சீலன் இராமாநுசன் இந்த மண்மிசையே. 40

மண்மிசை யோனிகள்தோறும் பிறந்து, எங்கள் மாதவனே
கண் உற நிற்கிலும், காணகில்லா உலகோர்கள் எல்லாம்,
அண்ணல் இராமாநுசன் வந்து தோன்றிய அப் பொழுதே,
நண்ணரும் ஞானம் தலைக்கொண்டு நாரணற்கு ஆயினரே. 41

ஆயிழையார் கொங்கை தங்கும் அக் காதல் அளற்று அழுந்தி,
மாயும் என் ஆவியை வந்து எடுத்தான் இன்று—மா மலராள்
நாயகன், எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும்
தூயவன், தீது இல் இராமாநுசன், தொல் அருள் சுரந்தே. 42

சுரக்கும் திருவும் உணர்வும்; சொலப்புகில், வாய் அமுதம்
பரக்கும்; இரு வினை பற்று அற ஓடும்—படியில் உள்ளீர்!
உரைக்கின்றனன் உமக்கு யான்; அறம் சீறும் உறு கலியைத்
துரக்கும் பெருமை இராமாநுசன் என்று சொல்லுமினே. 43

சொல் ஆர் தமிழ் ஒரு மூன்றும், சுருதிகள் நான்கும், எல்லை
இல்லா அறநெறி யாவும் தெரிந்தவன், எண்-அரும் சீர்
நல்லார் பரவும் இராமாநுசன் திருநாமம் நம்பி,
கல்லார் அகல் இடத்தோர்; எது பேறு என்று காமிப்பரே! 44

பேறு ஒன்று மற்று இல்லை, நின் சரண் அன்றி; அப் பேறு அளித்தற்கு
ஆறு ஒன்றும் இல்லை, மற்று அச் சரண் அன்றி—என்று இப் பொருளைத்
தேறும்-அவர்க்கும், எனக்கும் உனைத் தந்த செம்மை சொல்லால்
கூறும் பரம் அன்று, இராமாநுச! மெய்ம்மை கூறிடிலே. 45

கூறும் சமயங்கள் ஆறும் குலைய, குவலயத்தே
மாறன் பணித்த மறை உணர்ந்தோனை, மதியிலியேன்
தேறும்படி என் மனம் புகுந்தானை, திசை அனைத்தும்
ஏறும் குணனை, இராமாநுசனை—இறைஞ்சினமே. 46

இறைஞ்சப் படும் பரன், ஈசன் அரங்கன் என்று, இவ் உலகத்து
அறம் செப்பும் அண்ணல் இராமாநுசன் என் அருவினையின்
திறம் செற்று, இரவும் பகலும் விடாது, என்-தன் சிந்தையுள்ளே
நிறைந்து, ஒப்பு அற இருந்தான்; எனக்கு ஆரும் நிகர் இல்லையே! 47

நிகர் இன்றி நின்ற என் நீசதைக்கு, உன் அருளின்கண் அன்றி,
புகல் ஒன்றும் இல்லை ; அருட்கும் அஃதே புகல் ; புன்மையிலோர்
பகரும் பெருமை இராமாநுச ! இனி நாம் பழுதே
அகலும் பொருள் என்—பயன் இருவோமுக்கும் ஆன பின்னே ? 48

ஆனது செம்மை அறநெறி ; பொய்ம்மை அறு சமயம்
போனது பொன்றி ; இறந்தது வெம் கலி—பூங் கமலத்
தேன் நதி பாய் வயல் தென் அரங்கன் கழல் சென்னி வைத்துத்
தான் அதில் மன்னும் இராமாநுசன் இத் தலத்து உதித்தே. 49

உதிப்பன உத்தமர் சிந்தையுள் : ஒன்னலர் நெஞ்சம் அஞ்சி,
கொதித்திட மாறி நடப்பன ; கொள்ளை வன் குற்றம் எல்லாம்
பதித்த என் புன் கவிப் பா-இனம் பூண்டன—பாவு தொல் சீர்
எதித் தலை நாதன் இராமாநுசன்-தன் இணை-அடியே. 50

அடியைத் தொடர்ந்து எழும் ஐவர்கட்காய், அன்று, பாரதப் போர்
முடியப் பரி நெடுந் தேர் விடும் கோனை முழுது உணர்ந்த
அடியர்க்கு அமுதம், இராமாநுசன்—என்னை ஆள—வந்து இப்
படியில் பிறந்தது : மற்று இல்லை காரணம், பார்த்திடிலே. 51

பார்த்தான் அறு சமயங்கள் பதைப்ப ; இப் பார் முழுதும்
போர்த்தான் புகழ்கொண்டு ; புன்மையினேனிடைத் தான் புகுந்து,
தீர்த்தான் இரு வினை ; தீர்த்து அரங்கன் செய்ய தாள்-இணையோடு
ஆர்த்தான்—இவை எம் இராமாநுசன் செய்யும் அற்புதமே. 52

அற்புதன், செம்மை, இராமாநுசன்—என்னை ஆள வந்த
கற்பகம், கற்றவர் காமுறு சீலன்—கருது-அரிய
பற்பல் உயிர்களும், பல் உலகு யாவும், பரனது என்னும்
நற்பொருள்-தன்னை இந் நானிலத்தே வந்து நாட்டினனே. 53

நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன ; நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது ; தென் குருகை வள்ளல்
வாட்டம் இலா வண் தமிழ் மறை வாழ்ந்தது—மண்ணுலகில்
ஈட்டிய சீலத்து இராமாநுசன்-தன் இயல்வு கண்டே. 54

கண்டவர் சிந்தை கவரும் கடி பொழில் தென் அரங்கன்
தொண்டர் குலாவும் இராமாநுசனை, தொகை இறந்த
பண் தரு வேதங்கள் பார்மேல் நிலவிடப் பார்த்தருளும்
கொண்டலை, மேவித் தொழும் குடி ஆம்—எங்கள் கோக்குடியே. 55

கோக் குல மன்னரை மூவெழு கால் ஒரு கூர் மழுவால்
போக்கிய தேவனைப் போற்றும் புனிதன், புவனம் எங்கும்
ஆக்கிய கீர்த்தி இராமாநுசனை அடைந்தபின், என்
வாக்கு உரையாது, என் மனம் நினையாது—இனி மற்று ஒன்றையே.

மற்று ஒரு பேறு மதியாது, அரங்கன் மலர் அடிக்கு ஆள்
உற்றவரே தனக்கு உற்றவராய்க் கொள்ளும் உத்தமனை,
நல் தவர் போற்றும் இராமாநுசனை இந் நானிலத்தே
பெற்றனன்: பெற்றபின், மற்று அறியேன்—ஒரு பேதைமையே. 57

பேதையர் வேதப் பொருள் இது என்று உன்னி, பிரமம் நன்று என்று
ஓதி, மற்று எல்லா உயிரும் அஃது என்று, உயிர்கள் மெய்விட்டு
ஆதிப் பரனோடு ஒன்று ஆம் என்று சொல்லும் அவ் அல்லல் எல்லாம்
வாதில் வென்றான்—எம் இராமாநுசன், மெய்ம் மதிக்கடலே. 58

கடல் அளவு ஆய திசை எட்டினுள்ளும் கலி இருளே
மிடைதரு காலத்து, இராமாநுசன் மிக்க நான்மறையின்
சுடர் ஒளியால் அவ் இருளைத் துரந்திலனேல், உயிரை
உடையவன் நாரணன் என்று அறிவார் இல்லை, உற்று உணர்ந்தே. 59

உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகம்தொறும், திருவாய்மொழியின்
மணம் தரும் இன் இசை மன்னும் இடம்தொறும், மா மலராள்
புணர்ந்த பொன் மார்பன் பொருந்தும் பதிதொறும், புக்கு நிற்கும்—
குணம் திகழ் கொண்டல் இராமாநுசன், எம் குலக் கொழுந்தே. 60

கொழுந்துவிட்டு ஓடிப் படரும் வெம் கோள் வினையால் நிரயத்து
அழுந்தியிட்டேனை வந்து ஆட்கொண்ட பின்னும், அரு முனிவர்
தொழும் தவத்தோன் எம் இராமாநுசன் தொல் புகழ் சுடர் மிக்கு
எழுந்தது ; அத்தால் நல் அதிசயம் கண்டது இருநிலமே. 61

இருந்தேன், இரு வினைப் பாசம் கழற்றி இன்று ; யான் இறையும்
வருந்தேன்—இனி எம் இராமாநுசன் மன்னு மா மலர்த் தாள்
பொருந்தா நிலை உடைப் புன்மையினோர்க்கு ஒன்றும் நன்மை செய்யாப்
பெருந் தேவரைப் பரவும் பெரியோர்-தம் கழல் பிடித்தே. 62

பிடியைத் தொடரும் களிறு என்ன, யான் உன் பிறங்கிய சீர்
அடியைத் தொடரும்படி நல்க வேண்டும்—அறு சமயச்
செடியைத் தொடரும் மருள் செறிந்தோர் சிதைந்து ஓட வந்து, இப்
படியைத் தொடரும் இராமாநுச ! மிக்க பண்டிதனே ! 63

பண் தரு மாறன் பசுந் தமிழ் ஆனந்தம் பாய் மதமாய்
விண்டிட, எங்கள் இராமாநுசமுனி வேழம் மெய்ம்மை
கொண்ட நல் வேதக் கொழுந் தண்டம் ஏந்தி, குவலயத்தே
மண்டி வந்து என்றது ; வாதியர்காள் ! உங்கள் வாழ்வு அற்றதே. 64

வாழ்வு அற்றது தொல்லை வாதியர்க்கு ; என்றும் மறையவர்-தம்
தாழ்வு அற்றது ; தவம் தாரணி பெற்றது ; தத்துவ நூல்
கூழ் அற்றது ; குற்றம் எல்லாம் பதித்த குணத்தினர்க்கு அந்
நாழ் அற்றது—நம் இராமாநுசன் தந்த ஞானத்திலே. 65

ஞானம் கனிந்த நலம் கொண்டு, நாள்தொறும் நைபவர்க்கு—
வானம் கொடுப்பது மாதவன் : வல்வினையேன் மனத்தில்
ஈனம் கடிந்த இராமாநுசன் தன்னை எய்தினர்க்கு அத்
தானம் கொடுப்பது—தன் தகவு என்னும் சரண் கொடுத்தே. 66

சரணம் அடைந்த தருமனுக்காப் பண்டு நூற்றுவரை
மரணம் அடைவித்த மாயவன், தன்னை வணங்க வைத்த
கரணம் இவை உமக்கு அன்று என்று இராமாநுசன் உயிர்கட்கு
அரண் அங்கு அமைத்திலனேல், அரண் ஆர்—மற்று இவ் ஆர் உயிர்க்கே?

ஆர் எனக்கு இன்று நிகர், சொல்லில்?—மாயன் அன்று ஐவர் தெய்வத்
தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரிய,
பாரினில் சொன்ன இராமாநுசனைப் பணியும் நல்லோர்
சீரினில் சென்று பணிந்தது, என் ஆவியும் சிந்தையுமே. 68

சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து, முன் நாள்
அந்தம் உற்று ஆழ்ந்தது கண்டு, அவை என்-தனக்கு, அன்று, அருளால்
தந்த அரங்கனும் தன் சரண் தந்திலன் ; தான் அது தந்து,
எந்தை இராமாநுசன் வந்து எடுத்தனன்—இன்று என்னையே. 69

என்னையும் பார்த்து, என் இயல்வையும் பார்த்து, எண் இல் பல் குணத்த
உன்னையும் பார்க்கில், அருள் செய்வதே நலம் ; அன்றி, என்பால்
பின்னையும் பார்க்கில், நலம் உளதே ? உன் பெருங் கருணை-
தன்னை என் பார்ப்பர்—இராமாநுச ! உன்னைச் சார்ந்தவரே ? 70

சார்ந்தது என் சிந்தை, உன் தாள்-இணைக்கீழ் ; அன்பு-தான் மிகவும்
கூர்ந்தது, அத் தாமரைத் தாள்களுக்கு ; உன்-தன் குணங்களுக்கே
தீர்ந்தது, என் செய்கை ; முன் செய்வினை நீ செய்வினை-அதனால்
பேர்ந்தது—வண்மை இராமாநுச ! எம் பெருந்தகையே ! 71

கைத்தனன், தீய சமயக் கலகரை ; காசினிக்கே
உய்த்தனன், தூய மறைநெறி-தன்னை—என்று உன்னி, உள்ளம்
நெய்த்த அன்போடு இருந்து ஏத்தும் நிறை புகழோருடனே
வைத்தனன் என்னை—இராமாநுசன் மிக்க வண்மை செய்தே. 72

வண்மையினாலும், தன் மா தகவாலும், மதி புரையும்
தண்மையினாலும், இத் தாரணியோர்கட்குத் தான் சரணாய்
உண்மை நல் ஞானம் உரைத்த இராமாநுசனை உன்னும்
திண்மை அல்லால், எனக்கு இல்லை—மற்று ஓர் நிலை தேர்ந்திடிலே. 73

தேரார் மறையின் திறம் என்று, மாயவன் தீயவரைக்
கூர் ஆழி கொண்டு குறைப்பது : கொண்டல் அனைய வண்மை
ஏர் ஆர் குணத்து எம் இராமாநுசன் அவ் எழில் மறையில்
சேராதவரைச் சிதைப்பது—அப்போது ஒரு சிந்தைசெய்தே. 74

செய்த்தலைச் சங்கம் செழு முத்தம் ஈனும் திரு அரங்கர்
கைத்தலத்து ஆழியும் சங்கமும் ஏந்தி, நம் கண்முகப்பே
மொய்த்து அலைத்து உன்னை விடேன் என்று இருக்கிலும், நின் புகழே
மொய்த்து அலைக்கும் வந்து—இராமாநுச! என்னை முற்றும் நின்றே. 75

நின்ற வண் கீர்த்தியும் நீள் புனலும் நிறை வேங்கடப் பொன்
குன்றமும், வைகுந்த நாடும், குலவிய பாற்கடலும்
உன்-தனக்கு எத்தனை இன்பம் தரும்—உன் இணைமலர்த் தாள்
என்-தனக்கும் அது ; இராமாநுச ! இவை ஈய்ந்து அருளே. 76

ஈய்ந்தனன், ஈயாத இன்னருள் ; எண் இல் மறைக் குறும்பைப்
பாய்ந்தனன், அம் மறைப் பல் பொருளால் ; இப் படி அனைத்தும்
ஏய்ந்தனன், கீர்த்தியினால் ; என் வினைகளை வேர் பறியக்
காய்ந்தனன்—வண்மை இராமாநுசற்கு என் கருத்து இனியே ? 77

கருத்தில் புகுந்து, உள்ளில் கள்ளம் கழற்றி, கருது-அரிய
வருத்தத்தினால் மிக வஞ்சித்து, நீ இந்த மண்ணகத்தே
திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கிய பின், என் நெஞ்சில்
பொருத்தப்படாது, எம் இராமாநுச! மற்று ஓர் பொய்ப்பொருளே. 78

பொய்யைச் சுரக்கும் பொருளைத் துரந்து இந்தப் பூதலத்தே
மெய்யைப் புரக்கும் இராமாநுசன் நிற்க, வேறு நம்மை
உய்யக் கொள வல்ல தெய்வம் இங்கு யாது என்று உலர்ந்து, அவமே
ஐயப்படா நிற்பர், வையத்துள்ளோர்—நல் அறிவு இழந்தே. 79

நல்லார் பரவும் இராமாநுசன் திருநாமம் நம்ப-
வல்லார் திறத்தை மறவாதவர்கள் எவர், அவர்க்கே
எல்லா இடத்திலும், என்றும், எப்போதிலும், எத் தொழும்பும்
சொல்லால், மனத்தால், கருமத்தினல், செய்வன்—சோர்வு இன்றியே. 80

சோர்வு இன்றி உன்-தன் துணை-அடிக்கீழ்த் தொண்டுபட்டவர்பால்
சார்வு இன்றி நின்ற எனக்கு அரங்கன் செய்ய தாள்-இணைகள்
பேர்வு இன்றி, இன்று பெறுத்தும் இராமாநுச! இனி உன்
சீர் ஒன்றிய கருணைக்கு இல்லை, மாறு—தெரிவுறிலே. 81

தெரிவு உற்ற ஞானம் செறியப் பெருது, வெம் தீவினையால்
உரு அற்ற ஞானத்து உழல்கின்ற என்னை, ஒரு பொழுதில்,
பொரு அற்ற கேள்வியன் ஆக்கி நின்ருன் ; என்ன புண்ணியனே—
தெரிவு உற்ற கீர்த்தி இராமாநுசன் என்னும் சீர் முகிலே? 82

சீர் கொண்டு பேர் அறம் செய்து, நல் வீடு செறிதும் என்னும்
பார் கொண்ட மேன்மையர் கூட்டன் அல்லேன் ; உன் பத யுகம் ஆம்
ஏர் கொண்ட வீட்டை எளிதினில் எய்துவன் ; உன்னுடைய
கார் கொண்ட வண்மை, இராமாநுச! இது : கண்டு கொள்ளே. 83

கண்டுகொண்டேன், எம் இராமாநுசன்- தன்னை ; காண்டலுமே,
தொண்டுகொண்டேன், அவன் தொண்டர் பொன் தாளில்; என் தொல்லை வெம் [நோய்
விண்டுகொண்டேன்; அவன் சீர் வெள்ள வாரியை வாய்மடுத்து,இன்று
உண்டுகொண்டேன் ; இன்னம் உற்றன ஓதில், உலப்பு இல்லையே. 84

ஓதிய வேதத்தின் உட்பொருளாய், அதன் உச்சி மிக்க
சோதியை, நாதன் என அறியாது உழல்கின்ற தொண்டர்
பேதைமை தீர்த்த இராமாநுசனைத் தொழும் பெரியோர்
பாதம் அல்லால், என்-தன் ஆர்-உயிர்க்கு யாதொன்றும் பற்று இல்லையே. 85

பற்ரு மனிசரைப் பற்றி, அப் பற்று விடாதவரே
உற்ருர் என உழன்று ஓடி, நையேன் இனி ; ஒள்ளிய நூல்
கற்ருர் பரவும் இராமாநுசனைக் கருதும் உள்ளம்
பெற்ருர் எவர், அவர் எம்மை நின்று ஆளும் பெரியவரே. 86

பெரியவர் பேசிலும், பேதையர் பேசிலும், தன் குணங்கட்கு
உரியசொல் என்றும் உடையவன் என்று என்று, உணர்வில் மிக்கோர்
தெரியும் வண் கீர்த்தி இராமாநுசன் மறை தேர்ந்து, உலகில்
புரியும் நல் ஞானம் பொருந்தாதவரை—பொரும் கலியே. 87

கலி மிக்க செந்நெல் கழனிக் குறையல் கலைப் பெருமான்
ஒலி மிக்க பாடலை உண்டு, தன் உள்ளம் தடித்து, அதனால்
வலி மிக்க சீயம் இராமாநுசன் மறைவாதியர் ஆம்
புலி மிக்கது என்று இப் புவனத்தில் வந்தமை போற்றுவனே. 88

போற்று-அரும் சீலத்து இராமாநுச! நின் புகழ் தெரிந்து
சாற்றுவனேல், அது தாழ்வு; அது தீரில், உன் சீர் தனக்கு ஓர்
ஏற்றம் என்றே கொண்டு இருக்கிலும், என் மனம் ஏத்தி அன்றி,
ஆற்றகில்லாது : இதற்கு என் நினைவாய் என்றிட்டு அஞ்சுவனே. 89

நினையார், பிறவியை நீக்கும் பிரானை, இந் நீள் நிலத்தே
எனை ஆள வந்த இராமாநுசனை; இருங் கவிகள்
புனையார் : புனையும் பெரியவர் தாள்களில் பூந்தொடையல்
வனையார் : பிறப்பில் வருந்துவர் மாந்தர்—மருள் சுரந்தே. 90

மருள் சுரந்து ஆகமவாதியர் கூறும் அவப் பொருள் ஆம்
இருள் சுரந்து எய்த்த உலகு இருள் நீங்கத் தன் ஈண்டிய சீர்
அருள் சுரந்து, எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும்
பொருள் சுரந்தான்—எம் இராமாநுசன், மிக்க புண்ணியனே. 91

புண்ணிய நோன்பு புரிந்தும் இலேன்; அடி போற்றி செய்யும்
நுண்-அரும் கேள்வி நுவன்றும் இலேன்; செம்மை நூல் புலவர்க்கு
எண் அரும் கீர்த்தி இராமாநுச! இன்று நீ புகுந்து, என்
கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்ற இக் காரணம் கட்டுரையே. 92

கட்டப் பொருளை மறைப் பொருள் என்று கயவர் சொல்லும்
பெட்டைக் கெடுக்கும் பிரான் அல்லனே—என் பெரு வினையை,
கிட்டி, கிழங்கொடு, தன் அருள் என்னும் ஒள் வாள் உருவி,
வெட்டிக் களைந்த இராமாநுசன் என்னும் மெய்த்தவனே? 93

தவம் தரும்; செல்வும் தகவும் தரும்; சலியாப் பிறவிப்
பவம் தரும் தீவினை பாற்றித் தரும்; பரந் தாமம் என்னும்
திவம் தரும்—தீது இல் இராமாநுசன் தன்னைச் சார்ந்தவர்கட்கு :
உவந்து அருந்தேன்—அவன் சீர் அன்றி, யான் ஒன்றும் உள் மகிழ்ந்தே. 94

உள் நின்று உயிர்களுக்கு உற்றனவே செய்து, அவர்க்கு உயவே
பண்ணும் பரனும் பரிவிலன் ஆம்படி, பல் உயிர்க்கும்,
விண்ணின்தலை நின்று, வீடு அளிப்பான், எம் இராமாநுசன்
மண்ணின் தலத்து உதித்து, உய்மறை நாலும் வளர்த்தனனே. 95

வளரும் பிணிகொண்ட வல்வினையால் மிக்க நல்வினையில்
கிளரும் துணிவு கிடைத்தறியாது, முடைத்தலை ஊன்
தளரும் அளவும் தரித்தும் விழுந்தும் தனி திரிவேற்கு
உளர்—எம் இறைவர், இராமாநுசன்-தன்னை உற்றவரே. 96

தன்னை உற்று ஆட்செய்யும் தன்மையினோர் மன்னு தாமரைத் தாள்—
தன்னை உற்று ஆட்செய்ய என்னை உற்றான், இன்று தன் தகவால்—
தன்னை உற்றார் அன்றி, தன்மை உற்றார் இல்லை என்று அறிந்து,
தன்னை உற்றாரை—இராமாநுசன், குணம் சாற்றிடுமே. 97

இடுமே, இனிய சுவர்க்கத்தில்? இன்னும் நரகில் இட்டுச்
சுடுமே? அவற்றைத் தொடர் தரு தொல்லைச் சுழல் பிறப்பில்
நடுமே? இனி நம் இராமாநுசன் நம்மை நம் வசத்தே
விடுமே? சரணம் என்றால், மனமே! நையல்—மேவுதற்கே. 98

தற்கச் சமணரும், சாக்கியப் பேய்களும், தாழ்சடையோன்
சொல் கற்ற சோம்பரும், சூனியவாதரும், நான்மறையும்
நிற்கக் குறும்பு செய் நீசரும் மாண்டனர்—நீள் நிலத்தே
பொன் கற்பகம் எம் இராமாநுச முனி போந்த பின்னே. 99

போந்தது, என் நெஞ்சு என்னும் பொன் வண்டு, உனது அடிப்போதில் ஒண் சீர்
ஆம் தெளி தேன் உண்டு அமர்ந்திட வேண்டி நின்பால்; அதுவே
ஈந்திட வேண்டும்; இராமாநுச! இது அன்றி, ஒன்றும்
மாந்தகில்லாது; இனி, மற்று ஒன்று காட்டி மயக்கிடலே. 100

மயக்கும் இரு வினை வல்லியில் பூண்டு, மதி மயங்கித்
துயக்கும் பிறவியில் தோன்றிய என்னை, துயர் அகற்றி
உயக்கொண்டு நல்கும் இராமாநுச! என்றது உன்னை உன்னி
நயக்கும் அவர்க்கு இது இழுக்கு என்பர் நல்லவர்—என்றும் நைந்தே. 101

நையும் மனம் உன் குணங்களை உன்னி; என் நா இருந்து எம்
ஐயன் இராமாநுசன் என்று அழைக்கும்; அருவினையேன்
கையும் தொழும்; கண் கருதிடும் காண; கடல் புடை சூழ்
வையம்-இதனில் உன் வண்மை என்பால் என் வளர்ந்ததுவே? 102

வளர்ந்த வெம் கோப மடங்கல் ஒன்று ஆய், அன்று வாள் அவுணன்
கிளர்ந்த பொன் ஆகம் கிழித்தவன் கீர்த்திப் பயிர் எழுந்து
விளைந்திடும் சிந்தை இராமாநுசன் என்-தன் மெய்வினை நோய்
களைந்து, நல் ஞானம் அளித்தனன்—கையில் கனி என்னவே. 103

கையில் கனி என்னக் கண்ணனைக் காட்டித் தரிலும், உன்-தன்
மெய்யில் பிறங்கிய சீர் அன்றி வேண்டிலன் யான் ; நிரயத்
தொய்யில் கிடக்கிலும், சோதி விண் சேரிலும், இவ் அருள் நீ
செய்யில் தரிப்பன், இராமாநுச! என் செழுங் கொண்டலே! 104

செழுந்திரைப் பாற்கடல் கண் துயில் மாயன் திருவடிக்கீழ்
விழுந்திருப்பார் நெஞ்சில் மேவு நல் ஞானி, நல் வேதியர்கள்
தொழும் திருப் பாதன் இராமாநுசனைத் தொழும் பெரியோர்
எழுந்து, இரைத்து, ஆடும் இடம்—அடியேனுக்கு இருப்பிடமே. 105

இருப்பிடம்—வைகுந்தம், வேங்கடம், மாலிருஞ்சோலை என்னும்
பொருப்பிடம்—மாயனுக்கு என்பர் நல்லோர்; அவை-தம்மொடும் வந்து
இருப்பிடம், மாயன் இராமாநுசன் மனத்து ; இன்று அவன் வந்து
இருப்பிடம் என்-தன் இதயத்துள்ளே, தனக்கு இன்புறவே. 106

இன்பு உற்ற சீலத்து இராமாநுச! என்றும், எவ்விடத்தும்,
என்பு உற்ற நோய் உடல்தோறும் பிறந்து, இறந்து, எண்-அரிய
துன்பு உற்று வீயினும், சொல்லுவது ஒன்று உண்டு: உன் தொண்டர்கட்கே
அன்பு உற்று இருக்கும்படி என்னை ஆக்கி, அங்கு ஆட்படுத்தே. 107

அம் கயல் பாய் வயல் தென் அரங்கன் அணி ஆகம் மன்னும்
பங்கய மா மலர்ப் பாவையைப் போற்றுதும்—பத்தி எல்லாம்
தங்கியது என்னத் தழைத்து, நெஞ்சே! நம் தலைமிசையே
பொங்கிய கீர்த்தி இராமாநுசன் அடிப் பூ மன்னவே. 108

**இராமாநுச நூற்றந்தாதி முற்றும்**

இயற்பா முற்றும்

ஸ்ரீ :

# பாட ரூப பேதங்கள்

2082 தகளியாய்
சூட்டினன்
சூட்டினேன்
2083 படைத்து
அடைத்து
2084 பார் அடியும் ஓர்
பார் உடுத்து
சூர் உருவில்
பேய் அளவும்
2085 போர்க் கதவும்
2087 வண்ணனை யாம்
என்று மறப்பனோ
இன்று மறப்
பேனோ
2088 கருமங்கட்கு
2089 எரி கதிரோன்
தன்னை
2090 இன்று உன்
கிடந்த அன்றே
கிடந்தது என்னே
விரி கோட்ட
மா வடிவில்
மா வடியில்
மா வடியின்
2091 விண்ணில் அலகு
சீர் ஆழியார்க்கு
2092 தான் தொழா
2094 இயல்பு ஆக
ஈர்ந் துழாயான்
இயல்பு ஆக நீதி
யால்
2095 சாத்தியும்
2096 முதல் ஆவார்
மூவர்
மூது நீர் வண்ணன்
வையத்து
2097 வண்ணன் அடி
2098 விசும்பு அளந்தது
என்பார்
அடி உகிரால்
உலகு அளந்த
ஞான்று
2099 நான்று முலைத்
தலை
பொருது இடைவு
புள்ளின் வாய்
2101 ஏத்துவராம்
நின்று
ஏத்துவார் நின்று
2103 ஊர்ந்தாயை
2105 விரலொடு
ஞான்று
2106 மாகதமே
2107 நைந்து வைக்கும்
வேங்கடமே
2109 கையில் வலம்புரி
யும்
மலர்மகள் ஆகத்
தாள்
மா மதில்
நின் ஆகத்தான்
நின் ஆகத்தால்
2110 பிறை மருப்பில்
2111 உள்ளத்து
சென்று அறி
தண் துழாயான்
அடியே
2112 பற்றி பொன் ஆழி
மால் அடியே
2114 அருள்புரிந்த
நான்முகர்க்கு
2115 ஏழ் உலகும்உண்டு
முகில்வண்ண
நின்று உருகி
நின் உருவில்
2116 குற்றமாய்க்
கொள்ளில்
தேறின்
அடைதற்கு
என்னே
அடைதற்கு
என்றே
2117 முரண வலி
ஆம் அன்றே
வள் உகிரால்
2118 வாழ்வார்கள்
ஆய்வார்கள்
2119 என் என்ற
எம் என்ற
என் என்னும்
2120 கஞ்சன் முன்
அஞ்ச
2121 கன்று உகந்தான்
2122 குற்றம் செயிலும்
2123 திருமுகமே
அணைக் கிடந்தார்
2124 தாமே கைகூடும்
2125 தமர் உகந்தது
எவ்வண்ணம்
இருப்பரேல்
2127 பண்புரிந்த ஆகத்
தான்
போகத்தார்
2128 செந்நெறீ
செந்நிறீ
காண்பரோ
2129 செவ்வடிக்கே
2130 மாறும் பல்ஆக்கை
2131 புரிந்த பரிசினால்
2133 நண்ணில்
கைதொழுவார்
2134 சிங்காதனம் ஆம்
அணிவிளக்கு ஆம்
2136 ஆகினும்
ஆயினும்
பேர் ஆயர்க்கு

2137 பிதற்றில் அல்
லால்
எம் பெம்மானை
காண்கிலார்
2138 நயன் என்று நல்
மாலை
2139 மால் அடியைக்
2140 தன்னில் அங்கை
2141 சரணாய்
தாமரையாளோ
டும்
முரண் ஆய
அரண் ஆய மன்
2142 விலகும்
இலகு கருங் கட
லும்
2143 ஏழ் உலகம்
தாயனவும்
போயனவும்
2144 தொழாது என்
கேளவன் தேன்
மொழியே
கூறும் அதே
நள்ளேல்
2145 நம்மேல் வினை
எம்மேல் வினை
2146 செய்யானை
2147 ஓதுவதுவும்
2150 ஏழ் உலகும்
நீ வளர்ந்தது மெய்
என்பர்
நீ விளைந்தது மெய்
நீ கிடந்த மெய்
நீ கிடந்தாய் மெய்
மெய் என்பார்
சொல்
2156 இருவினைகள்
2157 பழுது ஒன்றி
2158 பூங்கிடங்கும்
2159 படம் உடைப்
பன்னகப் பள்ளி
யான்
கைதொழுது
கொன்னகைப்

2160 கொண்டாரை
நிவர்ந்திலையே
தோய மடுத்து
2161 பகைஞர்க்கு
2162 அடுகளத்து
அஞ்ஞான்று
2164 ஆயன் நிரை
விடை
என் நீ
உருவு உடைய
நேரார் நிசாசரர்
2165 ஞான்று
எயிற்று அளவும்
2166 படிகொண்டு
கொடிகொண்டு
படிவில்
நீர் ஏந்தும்
2167 பனி மறைத்த
காமரு
2168 தாள்கொள்மின்
2171 வணங்கானும்
அன்றே
நேர் அரியோன்
ஆய
இடந்த தூண்
2172 குரம்பையில்
2174 எயிறு இலகு
வாய் மடித்தது
ஈடு இழியச்
2175 சென்ற விந்தை
மறையவர்க்கு
2176 உரைக்கும் முறை
செல்லும் அவை
உண்டே
2177 கடைக்கைப் பிடி
2179 திரிவரேனும்
ஒருவர் அங்கத்து
2180 வேங்கடத்தின்
மேயானும்
2181 ஓர் அடியின்
2182 தகளியாய்
இடு திரியாய்
ஞாலச் சுடர்
ஞாலத் தமிழ்

2183 ஞானத்தான்
தானத்தான்
2184 பார்க் கடலான்
புரிவர்
2185 ஆங்கே திகழ
சேர்த்தி
அங்கமலம்கொண்
டான்
2187 உள் ஒடுக்கி
காண்பரேல்
வண்ணர் கழல்
2188 வாய் மடுத்து
கண் சுழன்ற
சேவடியே
2189 முலை உண்டாய்
அலை பண்பாய்
2190 பெரு மறையால்
2191 பிள்ளையா
நின் உள்ளே நின்
றமையால்
2192 இன்பத்தார் ஆவர்
2193 பலரும்
கண்ணுதலோன்
என்றே
தொழும் தகை
யான்
2194 தொடர் எடுத்து
இடர் எடுக்க
2195 பண்டு இப்பெரும்
பதியை
2196 திரிந்ததும்
அழகிதே
2197 அடிமைப்பட்டது
தான் அறியானே
னும்
2198 பிறை அணிந்த
2199 மார்பத்து
தான் கிடந்த
வான் கிடந்தான்
2200 மதிக்க
வேண்டாம்
2201 தாரணங்கள்
2203 பெற்றால் கரிதா
கும்

வென்று
தண்தோட்டு
2204 வலம் கொண்டு
2208 பரித்து எழுந்த
கதிர் மிகுத்து அம்
2209 நினைப்பு அரியன்
எனப் பலரும்
எனப் புகலும்
2213 மகிழ்ந்தது நின்
பாதமே
2214 பணிந்துலவும்
2217 அறிவாரும் தாம்
அறிவார்
2218 திருந்தத்
2219 இரு நிதியும்
சார்வும் அறிந்து
சார்பும் அறிந்து
சார்வு என்று
அறிந்து
2220 முடிவும்
அத்தனையே
2222 புக்குஇயலல்
ஆகா
அருளான் அறம்
அறம் அருளும்
என்றே
மாமறையோன்
ஈந்த
மாமறையோற்கு
2223 பிறப்பு என்றும்
2225 மானிடமாய்
நாவினுல் உள்
2226 அதன் நரகம்
அரு நரகம்
அரு நரகும்
2228 அணி உருவன்
மற்று எல்லாம்
உளன் கிடந்த
2229 வியன் இரு
ஞாலம்
2231 ஆங்கு அவர்
சொன்ன
2233 ஆர் அது
அறிவான்
ஆர் அன்று
அறிவார்
2234 நிறையார் குழல்
தாழ்ந்த
இளங் கரி
பூங் கொடிகள்
யான் விரும்பும்
2235 நீர் மதிக்கும்
2238 கடைப்படுமின்
கேட்டிரோ
கேட்டீரோ
2239 பாடு என்னும்
பாடு என்றும்
2240 காண்குற்ற
போது
இருள் இரிந்து
இருள் திரைந்து
இருள் தெரிந்து
இருள் தெளிந்து
உன்னையும் அங்கு
2243 பேதமையால்
மாறு ஒன்று
2244 பட்ட விடுசாபம்
பட்ட இடிசாபம்
சொல்லில்
2245 கதையும் பெரும்
கண்ண
நின் பெயரே
இதையம்
ஏத்துக் கதையின்
ஏத்திக் கதையின்
கதையும் திரு
மொழியாய்
2246 கமலக் கையால்
2249 வாள் அவுணன்
2250 பூவேகும்
பூவேறும்
2251 தமர் உள்ளம் தன்
பொருப்பு
தமர் உள்ளம்
மாமலலை
ஏவலலை
2252 அடங்கான்
அடி நிமிர்ந்த
2254 கரி இடந்த
துணிந்தேன்
யான்
2255 பெருந் தமிழன்
அல்லேன்
நல்லேன் பெரிது
2258 சாற்றி உரைத்தல்
சார்த்தி உரைத்
தல்
2259 நிமிர்ந்து அளப்ப
நிவர்ந்து அளப்ப
பேர் மொழிந்த
2260 தான் இரப்பான்
மொய் மலரான்
தோள் நலம்
தான்
எத்தனைக்கும்
2261 நினைந்து எனது
2262 ஊன் திகழும்
மேனி
2264 குறையானவெம்
என் சொற்கள்
செய்த வரம்
2265 உரம் கருதும்
மூக்கத்தவனை
மூக்கத்தவன்
2266 அமுது என்னச்
சொல்
2267 நவின்று உரைத்து
2269 தாம் செல்வ
தன்பின்
கடி நரக
2270 கதம் சிறந்து
உதவிப் போர்
யானை
2271 கைதொழுது
2272 அளந்தான் இக்
கார்க் கடல்
2273 எத்தினுர் தாம்
2274 அவை கூடா
முன்னம்
2277 முத்தி மறை
யாவான்
2278 திரு மார்ப

வல்லி இது எனும்
வல்லி ஈது எனும்
ஈது என்னும்
வல்லி அது எனும்
காண்மின்கள்
2484 செறித்து
2486 பரிபவர்தாம்
கருஞ் சுடர் ஆழி
2487 இது அன்றி
கிளியும் எழுகும்
இடும் தொண்
டையோ
ஈது அறிவு
அரிதே
2488 அரியனை
யாம் என்று
வெண் முத்தும்
பேர்கின்றதே
2489 பேர்கின்றதே
இது எல்லாம்
எனவே
2490 நடாவுதிர்
தண் வாடை
தணிந்து
2492 கயலோ நும்
கண்கள்
அயலோர் அறிகி
லும்
புனவேங்கடத்து
2493 ஊழிகளாய் படும்
ஊழிகளாய் அடும்
2495 காரிகைக்கே
2496 கூயருளாய்
2497 உலகு ஏழ் உண்
டான்
மாலையும் தண்
ணம்
2498 தொடு உணப்
2500 புண்டரீகத் தண்
கேழ்
இயல்புகளே
2501 இயல்பு ஆயின
ஓரோ குடங்கை
கண்கள் தன்
னெடும்
2502 வளைவு விளக்கு
மால்
யவர்க்கும்
2503 கோது கொண்டு
தேன் நலம்
சோலை
2504 செருவாரும் நட்பு
செறுவார் உன்
நட்பு
இறை கூய்
இதோ வந்து
2506 இருந்தாள் இவள்
சொல்லால்
பெடையொடும்
செல்ல
அன்னன்ன
நீர்மை கொல்லோ
2507 இன்னம் சொல்
லீரோ
2508 இசையலம்
இசையிலும்
சிமையம் மிசை
2509 நல் நீர் சுமந்து
2510 அவற்றின் புறத்
தாள்
2511 சீர் அடியால்
நாயகன் தன்
னெடு
தன்னெடும்
செயப்பாலதுவே
2512 நல்குற்றை எல்
லாம்
நல்குற்ற எல்லாம்
சோர்வான்
2513 துழாய் நெடும் சூழ்
என்று தன் தண்
தார்
இழந்த இக்
காலத்தும்
இங்கு இவளோ
அம்மவோ
இலங்கை
2514 கொடுங் கோல்
சிலையர்
நிரை கொள்
உழவர்
கவ்வத்து
2515 தம்கால்
குடமாடியும்
மண்ணும்
உலகு அளந்த
2517 நிரந்தன
நிறைந்தன
ஞானப் பொன்
துழாய் அலங்கல்
சூழ்
2518 என்று புன்வாடை
தெரியிலும்
தெரியலம்
தூற்றி நின்று
எம்மை
வான் காற்று
2519 விண்ணும்
மண்ணும்
தன்பால்
எம் பிரானின்
எம் பிரான் தன்
2520 எப்பால் யவர்க்
கும்
2521 உயிர் ஞானச்
சுடர்
ஞாலச் சுடர்
விளக்காய்
எம் பிரானது
பெருமையே
2522 வைத்தார் இவை
வைத்தார் இவர்
இவ் அகாலம்
தொல்லை ஆழி
அம்
சூழ் பிறப்பும்
2523 அம் பொன்
பெயரோன்
2524 சொரிகின்றன
அதுவும்

விண்ணோர்
தொழவே
விண்ணும்
தொழவே
சரிகின்றன
சங்கம்
2525 கிரிமி
சொல்லிய சொல்
கைத்து
என்னால் உன்
தன்னை
திருமாலை வன்
கவி யாது
சொல்லும்
சொல்லாய்
2526 உண்டு உமிழ்ந்தும்
உமிழ்ந்தும் கடாய்
2527 கடாகின்ற தேன்
நவின்ற
2529 வெண் திரைக்கே
கொண்டு
2531 சிறகால் பறத்தீர்
நுங்கட்கு எளியது
2533 விடு நல் திரு
அருளால்
தோழீ ஓர்
பொலன் கலனே
2534 பொலக்
குண்டலப்
கலக்குண்ட
ஞான்று
2536 தன்மை அவ் ஆழி
காதலில்
காதலுள்
தளப்பு அரு
2539 இரக்கிலும்
இரைக்கிலும்
உரைக்கினும்
2540 இருக்கின்றதே
2541 கனி இன்மை
யில்
2542 ஓரோ கருமம்
ஓரோர் கருமம்

உலகு எல்லாம்
எம்மை உண்
கின்றதே
2543 அன்னாய்
கண்ணா
2544 அசுரர்ச் செற்ற
2545 கலந்தாய்
2546 அருளாய் விடுமே
வருந்தேன்
2547 மிக வந்த
2548 உண்டான்
எனலும்
கொண்டு என்னை
நாழ் இவளோ
என்று
2549 சுருங்கா இருளும்
கருந் திணம்பை
கருந் திடும்பை
2550 உலகாரைச்
ஆரச் சிறக்கும்
பருதி வட்டம்
சால்வின்
2551 திரைப் பாயில்
சூடும் துழாய்
2552 நும்வியல் இடமே
2553 வடம் போதில்
னையும்
விடம்போய்
இது வியப்போ
2554 எம் பிள்ளை
நன் செங்கோல்
எள்கு பொன்
மாலை
வெங்களம்
செய்து
துழாய்த்
துணையாய்
2555 வலியின் பெருமை
யும்
யான் சொல்லும்
நேர்த்து அல்ல
உருவில்
2556 வெண்புரி
நூலினை

பரவுகின்ற
தொழுதார்
விண்ணுளாரினும்
2557 செலக் கழிந்த
ஞாயிறு
நீத்த வண்ணத்து
ஓர்
நீத்த வஞ்சத்து
நீத்து வஞ்சித்து
வஞ்சித்
தோராசே
2558 தாயார்
பெற்றார்
கொல்
2559 செஞ் ஞாயிறு
உதயம்
மலைவாய்
வண்ணத்து
2560 மெல் ஆவியுள்
2561 மைய நல்லார்கள்
மையல் வண்ணா
என் தனி
மாணிக்கமே
2562 இருள் ஓடி
சுடர் விடும் மாலை
மாகதமே
அடியேனுடை
ஆவி
2563 உடைக்கலத்து
ஊண்
புடைக்கலர்ந்
தானை
அம்மானை
புலம்புவதே
2564 கனைகுரல் போழ்
வாய
கனைகுரல்
சூழ்திரை
2565 அவன் சித்தமே
பிதற்றா
திருமால் தனைக்
கொண்ட
2566 தீவினைகட்கு
அரு நஞ்சை

2607 மோதாமை
2608 இல்லாத தானே
பிறர்கட்கும்
கீழ் மேல் ஆர்
அமைப்பார்
2611 அடியார்
செறி கழல்கள்
தாள் நிமிர்ந்து
செறி கழல் தாள்
2612 இன்றே நான்
காண உணர்ந்து
காணும் உணர்வு
2613 அவ்வளவர்
2614 ஆங்கே
2615 வல்வினையும் தீர்ப்
பான்
தமர்க்கு
2616 எமக்கு என்றும்
2617 தன் உரைக்கில்
2618 தொல்வினையும்
பார்க்கடியும்
2619 வன் புடையான்
வன் படையான்
மார்பு இடந்தான்
அன்புஉடையான்
2620 எவனேனும்
2621 அறிது என்னே
2622 ஆகிலும்
2624 போய்ப் போய்
2625 மள்ளர்
கேளாதே பல்
நாளும்
2626 புகாவான் அவை
2627 அவயம்
நவைய
2628 மிக ஓர்ந்து
மிக வாய்ந்த
வீழா எனினும்
தான் செய்யும்
2629 வெம்மையே
அஞ்சி
2630 மா கதியாய்
நீ கதியாய்
நீ கதியா

2632 காரணமாய்
கொன்றூனே என்
மனத்துக்
2633 கொண்ட நாள்
2634 ஒன்றை நோக்
காது
சிந்தையார் தம்மை
பிளந்தார் வனம்
2635 வனம் ஆளும்
தண் துழாயான்
அடியே
அடியைத்தான்
காணும்
2636 அந் நான்று
உன்னுவாய் தான்
2637 இருத்தி நீர்
தன் சிந்தையிலும்
2639 எனக்கு அவரை
எப்போதும்
உள்ளால்
எப்போதும்
உள்ளார்
தீர்ப்பான்
2641 போய் அவுணன்
2642 மேலாப் பிறப்பு
யாம் வேண்டும்
2643 பேர்த்து
2644 ஈன் துழாய்
2645 மறை முறையான்
மூறை முறையால்
ஓவாதே
2647 காற்று இழிந்த
காற்று எழுந்த
பாதகி மூக்கும்
பரிச் செவியும்
2648 அவன் ஆகில்
கய்தான்
2649 எப்போதும் சூட்டு
2650 இழைத்த
மாதவனை
2651 அதுவோபொருள்
இல்லை என்றே
2652 ஒழிந்த கொலோ
ஓ பாவம்

2653 முகம்சிவந்தவராம்
சிதைவராம்
என்றே
சிந்தனையேன்
தனை
2654 மாதா பிதாவாக
2655 இனி நின்ற
இனி நன்று
அகத்து உலவும்
2656 முதலார் திரு
வுருவம்
முதலான் திரு
வுருவம்
முதல்வ
கார் உருவ
கார் உருவாய்
என்றே
2657 உருவு ஒன்று
2658 ஒழியாமல்
யான் இருந்தால்
2659 நின் அகத்தே
நீ பெரியன்
நேமியால்
உள்
2660 உலகு அளவு
யானும்
யானும் உளன்
ஆவது
2663 தேசு என்றே
2665 திரிந்து
2666 திரிந்து
இல்லையால்
கரந்துருவில்
அஞ்ஞான்று
பின் தொடர்ந்து
எம்மானை
2667 இதுவே கண்டீர்
செயப்பால
வல்லமே
வவ்விருளை
2668 கூப்பாது
2670 கைகலந்த நேமி
யான்
2671 இப்போது

2732 நிற்றிநாம்
மான் நோக்கில்
2735 பேடை வாய்ச்
2736 துன்னு மதி
உருக்க
தன் உடலம்
2738 தான் கண் துயி
லும்
2740 கல் நிறைந்து
தீர்ந்து
திரு வயிற்றுப்
பேயே
திரு வயிற்றில்
பேயே
2741 வெயில் வெறித்த
2742 செவ்வாய் பிணே
நோக்கில்
பிணே நோக்கி
காதலனேக்
காணுதே
தான் சென்றும்
சென்று அங்கு
2745 பன்னுகராயன்
தன் பாவை
2746 தழுவிக்கொண்டு
2751 தரித்து அங்கு
2753 கபாடம் கடந்து
2754 மன்னவன் தன்
2755 சூடாமணி
இமைப்ப
2756 என்னுடை நெஞ்
சம்
2757 தவிர்த்தான் என்
கொலோ
செழும் சாந்தின்
சந்தனத் தாது
அளேந்து
மண் இவ்வுலகம்
பொத அணேத்து
பொது வணேந்து
2758 எனக்காக எய்
கின்றுன்
காப்பீர்தான்
இல்லேயே
காப்பார்தாம்
இல்லேயே
2760 மூப்பு இன்று
2761 கண் வளரக் கட்
டுண்டு
2764 மாமண்டி வெஞ்ச
மத்து
2765 ஆயிரங்கண்
2766 தாள்மேல்
கடாத்தி
2767 புகழ் படைத்து
மின் இலங்கும்
நீர்தாம் விழுங்க
வட மலேயே
துயர் கடந்த வள்
ளலே
2768 மன்னும் குறளுரு
வின்
2770 அத்துணேக்கே
2771 ஏழ் உலகம்
போய்க்
உலகம் ஏத்து
வித்த தாளானே
2772 மின்னிய தண்
சேறை
2773 மரகதத்தை
2775 தத்துவத்து முத்
தினே
2778 மின்னு மழை
2779 அன்ன உருவில்
அரியை
2784 நாம் வணங்கும்
2786 முன் நாள்
படலேத் திறந்து
படித் திறந்து
2787 தான் முன்நாள்
பெயர்த்தும் குடம்
ஆடி
2789 மா முனிக்காய்த்
2790 மற்று அவைதான்
வன்னிய பூம்
2792 மணிதரை
குறையில் பிரான்
பேர் இயல்பே
2793 புலற்றி
பேர் உடையார்
2794 இருள் சுரந்த
பாதம் எந்தன்
சென்னி
2795 உற்ற அன்பன்
அவன்
என்பால எனக்
குற்றம்
என்பால் இனக்
குற்றம்
இயல்பு இது,
இயல்வு இது
2796 இன் கவிகள்
ஈன் கவிகள் இன்
பால்
இல்லாதவன்
பாவி
2797 மொழியைக் கடத்
தும்
முக்குறும்பான்
எம் கூரத்தாழ்
வான்
பழியைக்கடக்கும்
பாடி அல்ல வழி
வருத்தம் என்றே
வருத்தம் இன்றே
2798 பிற இருள்
மாய்த்த எம்
மாய்த்த என்
2801 ஆரியம் செம்மை
இராமாநுசன்
இராமாநுசன்
தனே
காரிய வண்மை
2802 முனிவர்க்கு
இன்றிக்
2803 துளவத்து எழில்
செந்தமிழின்
பெய்யும்
2805 மாலே என்றும்
மணிதரைச்
சேரோன்

மனுசரைச்
சேரேன்
2806 தலை முழுதும்
கலியே
அரங்கன் மௌலி
2807 முந்தினும்
மொய்த்திடினும்
தனியானைத்
தண் தமிழ் நூல்
செய்த
2809 என்று நீள்
நிலத்தே
என்று நீள் நிலத்
தோர்
2811 முகில் என்ன
யதிகட்கு
2812 வெப்பம் முது
கிட்டு
2813 அறுவினையேன்
2814 தீவினையார்
முன நாள்கள்
பொய்த்தவன்
போற்றும்
கற்ற மெய்ஞ்
ஞானத்து
2815 இராமாநுசா
யாரே அறிபவர்
உன் அருளின்
தன்மை
அல்லற்கு
என்னை உற்றபின்
2816 மெய்க்குற்றம்
நீங்கி
விளக்கிய மேகம்
இயல்பு ஆக
ஆகி நின்றோர்
இயல்பே
2817 வெள்ளச் சுடர்
விடும்
இராமாநுசா என்
2818 நெஞ்சில் குறை
கொண்ட
என்னை வாழ்வு
வாழ்வு என்று

கூடியதே
2819 விதி இன்று
பாட்டு என்றும்
2820 எய்திலன்
2822 சிறு கலியால்
2823 படைத் தண்டும்
2824 செறித்து உண்
ணும்
பலத்தைச்
செறுத்தும்
பிலத்தைச்செறித்
தும்
2825 என்னை எவ்வாறு
என்று அடர்ப்
பதுவே
2826 நாதன் என்று
2828 பொருளால் முன்பு
இராமாநுசா நின்
இராமாநுசன் நின்
2429 உள்ளார் தரமோ
தம் ஈறு இல்
தெருளும் திறல்
தந்து
2830 வாமனன் சீரை
2831 கண் உற நிற்
கினும்
காண கில்லார்
2832 வாயும் என்
ஆவியை
2833 அருவினை
2835 இராமாநுசா
மெய்ம்மை
2838 நின் அருளின்
இராமாநுசா இனி
இருவோமுக்கு
ஆன பின்னே
2839 புன்மை அறு
சமயம்
2840 கொள்ள வன்
கூற்றம்
யதித்தலை
2841 பார்த்திடினே
2843 அற்புதம் செம்மை
பல் உலகில் யாவும்

2844 இல்லா வண்தமிழ்
இயல்பு கண்டே
2845 தொகை அறுந்த
கோக்குலமே
2846 அடைந்தபின்னே
வாக்கு
அடைந்ததற் பின்
வாக்கு
2847 இராமாநுசனை
2848 இது என்று
எண்ணி
பிரமம் என்று
என்று
2849 மிடை தரும்
காலத்து
தூரத்திலனேல்
2850 என் குலக்
கொழுந்தே
2851 இராமாநுசன் தன்
புகழ்
2852 இனி நம் இராமா
நுசன்
என்றும் நன்மை
பெருந் தேவனைப்
பரவும்
2853 மருள் சுரந்தோர்
படியில் தொட
ரும்
இராமாநுசன்
மிக்க
இராமாநுசா மிக்க
2854 கொழுந் தண்டும்
மண்டி வந்து
ஈன்றது
2856 ஞானம் கனிந்து
2857 தருமனுக்காய்
2858 யார் எனக்கு
எனக்கு என்று
2859 கண்டு இவை
2860 இராமாநுசா
நின்னைச் சார்ந்த
வரே
2861 சார்ந்த என்
இத் தாமரைத்

செய்வன அசனுல்
இராமாநுசா எம்
இராமாநுசா உன்
2862 எந்தும்
2863 தேர்ந்திடினே
2865 செழு முத்தும்
என் கண்முகப்பே
இருக்கினும்
உன் புகழே
புகழே மொய்த்து
இராமாநுசா
இராமாநுசன்
என்னை
என்னை மொய்த்து
நின்றே
2866 நின்ற உன் கீர்த்தி
யும்
வேங்கடம் போல்
பார்க்கடலும்
இராமாநுசா
இவை
ஈந்து
2867 ஈந்தனன்
பல் பொருளாய்
ஏய்ந்தவண்கீர்த்தி
யினுல்
2868 இராமாநுசா
2869 கொள்ள வல்ல
உணர்ந்து
அவமே
வையத்துளோர்
அறிவு அழிந்து
2870 மதியாதவர்கள்
யவர் அவர்க்கு
2871 இராமாநுசா
திரு உறிலே
2872 திருவுற்ற
பெருதவெம்
தீவினை
உரு அற்ற
ஞாலத்து
2873 வீடு பெறுதும்
வீடு பெரிதும்
வீடு சிறிதும்
மெய்ம்மையர்
கூட்டன்
இராமாநுசா இது
2874 வாய் மடுத்திட்டு
இன்னம் இத்தனை
உலைப்பு
இல்லையே
2875 பேதைமை
தீர்க்கும்
2876 மனிதரைப்
கருதும் முன்னம்
பெற்ருர் யவர்
பெற்ருர் அவர்
அவர்
எம்மை இன்று
2877 பெரியவர் பேசி
னும்
பேதையர் பேசி
னும்
உரிய சொல்
ஒன்றும்
பெறும் கவியே
2878 புவிமிக்கதுஅன்றி
2879 இராமாநுசா நின்
எற்றை அன்றி
இருக்கினும் என்
மனம்
2880 நினைவார்பிறவியை
நீள் நிலத்தில்
2881 கூறும் மறைப்
பொருளாம்
மறப் பொருளாம்
இருள் சுமந்து
இருள் நீங்கித்
இராமாநுசன்
என்றும்
இராமாநுசன்
என்னும்
2882 இராமாநுசா
கண்ணுளும்
நெஞ்சுளும்
2883 கட்டைப்
பொருளை
அல்லனேன் என்
2884 செல்வம் தகவும்
சரியாப் பிறவி
சேர்ந்தவர்கட்கு
உவந்து இருந்
தேன்
யான் என்றும்
நான் என்றும்
நான் ஒன்றும்
2885 உயிர்கட்கு
அவர்க்கு உயர்வு
உதித்து மறை
நாலும்
2886 நல் வினையின்
எம் இறைவன்
2887 என்னை உய்த்
தான் இன்று
சார்த்திடுமே
2890 வேண்டிஅன்பால்
நின்பால் அஃதே
இராமாநுசா இது
மயக்கிடிலே
2891 வல்லியைப் பூண்டு
இராமாநுசா
என்றது
ஒன்றை உன்னி
அழுக்கு என்பர்
2894 காட்டித் தரினும்
கிடக்கில் என்
விண் சேரில் என்
இராமாநுசா என்
2895 திருப்பாற்கடல்
பாற்கடல் பள்ளி
கொள் மாயன்
2897 இராமநுசா
வீயிலும்
2898 பூ அன்னவே

# இப் பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடிகளும் புத்தகங்களும்

## சுவடிகள்

| | | |
|---|---|---|
| ஸ்ரீ வானமாமலை மடம் ஏடு | | 1 |
| நாங்குனேரி (பிரதேசம்) | ,, | 5 |
| திருக்குறுங்குடி மடம் | ,, | 1 |
| மதுரைத் தமிழ்ச் சங்கம் | ,, | 1 |
| ஸ்ரீ பெரும்பூதூர் | ,, | 3 |
| ஓரியண்டல் லைப்ரரி | ,, | 4 |
| அடையாறு லைப்ரரி | ,, | 3 |
| | | 18 |

## புத்தகங்கள்

| | | |
|---|---|---|
| கூர்மாசாரியர் | பதிப்பு | 1856 |
| அப்பாவுமுதலியார் | ,, | 1865 |
| ஸ்ரீநிவாஸவரதாசாரியர் | ,, | 1898 |
| வியாக்கியான புத்தகங்கள் | | 1901 |
| காரப்பங்காடு கோபாலசாரியர் | ,, | 1908 |
| அரசாணிபாலை கந்தாடை கிருஷ்ணமாசாரியர் | ,, | 1912 |
| பி. ப. அண்ணங்கராசாரியர் - திவ்யார்த்த தீபிகை | | 1927–1930 |
| சே. கிருஷ்ணமாசாரியர் | ,, | 1928 |
| இரத்தின நாயகர் ஸன்ஸ் | ,, | 1938, 1952 |
| T. C. பார்த்தசாரதி அய்யங்கார் | ,, | 1939 |
| மயிலை மாதவதாசன் | ,, | 1943, 1950 |
| பி. ப. அண்ணங்கராசாரியர் | ,, | 1956 |
| தெலுங்குப் புத்தகம் | | |

ஸ்ரீ :

# அரும்பத விளக்கம்

## அ

அஃகாத - குறையாத, மாறுத
அஃகாவே - சுருங்கிப் போகாவோ, கிட்டாவே
அகடு - வயிறு, நடுவிடம்
அகத்தாய் - இடமாக உடையவனே
அகத்து - உள்ளே
அகப்பட - உட்பட
அகம் - மனம்
அகல் இடம் - பூமி
அகலம் - வயிறு, இருதயம், ஸங்கல்பம்
அகன் - வயிறு
அகைப்பு - ஸங்கல்பம், எழுச்சி, மதிப்பு, பிரயத்தினம்
அங்கம் - உடம்பு
அங்கன் - அங்கத்தையுடைய பிள்ளை, புதல்வன்
அங்காந்து - வாய் திறந்து
அங்கை - அகங்கை, உள்ளங்கை, அழகிய கை
அசுரர்கோன் - அசுரர்க்கு அரசன், அசுரர் தலைவன்
அசைந்து - ஆடி, அலைச்சல்பட்டு
அசைமின் - இருங்கள்
அசைவு - தளர்வு, தளர்ச்சி, களைப்பு, நாசம்
அஞ்சனம் - மை
அஞ்சிறை - அகம் சிறை, உட்சிறகு, அழகிய சிறகு
அஞ்ஞான்று - அக்காலத்தில்
அட்டான் - கொன்றவன்
அட்டு - கொன்று
அடங்கார் - பகைவர்
அடர்ப்படார் - நெருக்குப்படார்
அடல் - வலிமை, நெருங்கின, போர்
அடி எடுத்தல் - கால் வாங்குகை, வெளியில் புறப்படுதல்
அடிக்கோலி - அகலப் பாரித்து, அகலுகைக்கு உத்தேசித்து
அடிதாறு - பாத-ரேகை, பாதுகை
அடியதோ - அடிமைப்படக்கூடியதோ
அடிவட்டம் - திருப்பாதமாகிற வட்டம்
அடுகளம் - போர்க்களம்
அடுத்த - நெருங்கிய
அடை - இலை
அடைப்பு - பற்றுதல்
அண்டர் - தேவர், வானோர்
அண்டர்கோன் - தேவாதிதேவன், (திருமால்)
அண்டம் - அண்டபித்தி, பூமி, உலகம்
அண்ணல் - பெரியோன், தலைவன்
அணி - அழகு, வரிசை
அணி விளக்கு - மங்கள தீபம்
அணுக்கராய் - அண்மையில் இருப்பவராய்
அணுகுதல் - நெருங்குதல்
அணை - படுக்கை
அணைப்பார் - நினைப்பவர்
அதவி - அடர்த்து, நெருக்கி
அதிர்தல் - நடுங்குதல்
அதிரும்-ஒலிக்கும், பேரொலி செய்யும்
அந்தரத்தார் - ஆகாயத்தில் வசிப்பவர், தேவர்கள்
அந்தரம் - காலதாமதம், விளம்பம்
அந்தி - அந்திக்காலம், சந்தியாவந்தனம் முதலிய கர்மானுஷ்டானம்
அந்தாதி மேலிட்டு-அந்தாதித் தொடையில் அமைந்த செய்யுட்களை மேற்கொண்டு
அநாதன் - தனக்குமேல் ஓர் தலைவன் இல்லாதவன்
அப்பு - நீர்
அம் - அழகு
அம்ம - வியப்புக் குறிப்பு
அம்மனே - ஆச்சரியம், வியப்புக் குறிப்பு

அம்மனே - தாய்
அம்மான் - பெருமான், சுவாமி
அமம் சூழ்ந்து - அமைந்து பரந்து
அமர் - யுத்தம், போர்க்களம், அமர்தல்
அமர் உலகம் - தேவலோகம், சுவர்க்கம்
அமர்க்கண் - யுத்த பூமியில், ஒன்றோ டொன்று போரிடுகின்ற கண்கள்
அமர்தல் - தங்குதல், பொருந்துதல்
அமரர் - தேவர்
அமராமை - ஒப்பாகாதபடி
அமளி - படுக்கை, ஆசனம்
அமை - மூங்கில்
அமைக்கும் பொழுது - ஆறியிருக் கைக்கு அவகாசம்
அமையா - அடங்காத, விடுவிக்க வொண்ணாத
அமையும் - தகும்
அயர்த்தல் - மறத்தல், பிரமித்தல்
அயர்த்து - அறிவின்றி
அயராப்பு - மறவாமை
அயல் நின்ற - அருகில் இருக்கிற
அயலார் - பிறர்
அயலிடை - அருகில், பக்கத்தில்
அயன் - பிரமன்
அரங்கம் - இடம், கோயில், திருவ ரங்கம்
அரங்கு - நாடகசாலை
அரண் - காப்பு
அரந்தை - துன்பம்
அரவம் - சப்தம், ஆரவாரம், பாம்பு
அரவிந்தம் - தாமரை
அரவு - பாம்பு
அரவு அரசு - பாம்புகளின் அரசன்
அரன் - சிவன்
அரி - சிங்கம்
அரி உருவன் - நரசிங்க உருவம் உடை யவன்
அரி உருவும் ஆள் உருவும் - சிங்க வடிவும் மனித வடிவும் ஆன நர சிங்கம்
அரிதல் - அறுத்தல், பறித்தல்
அரிது - அருமையானது, இயலாது
அரிய புலன் - கொடுமையான இந்திரி யங்கள்
அரியாய் - நரசிங்கமாய்
அரியான் - அருமையாக இருப்பவன்
அரு - அந்தராத்மா
அருக்கன் - சூரியன்
அருகும் - கிட்டும்
அருநரகம் - கொடிய நரகம்
அரும்ப - மலர
அருவி உகுமதம் - அருவிபோல் பாய் கின்ற மதநீர்
அருவினை - நீக்குதற்கு அரிய கொடிய பாவம்
அருள் நீர்மை - கருணைபுரியும் இயல்பு
அருளாது ஒழியுமே - அருள் செய்யாமல் போவனோ
அருளிக்காண் - அருள்செய்
அல்லல் - துன்பம்
அல்லி - இதழ்
அல்லேல் - அன்றாகில்
அலகு அளவுகண்ட - எண்ணிக்கை களை எல்லைகண்ட (எண்ணிறந்த)
அலங்கல்-மாலை, அலங்குதல், அசைதல்
அலந்தான் - வருந்தியவன்
அலம்புதல் - ஒலித்தல்
அலமருகின்றன - சுழல்கின்றன, தடு மாறுகின்றன
அலர் - பரந்த
அலர் - மலர்
அலர் எடுத்த வண்ணத்தான்-தாமரை மலர்போல் நிறமுடைய இந்திரன்
அலர்தல் - விரிதல், மலர்தல்
அலைப்ப - மோத
அலைபண்பு - மிக்க நீர்மை, அதிசயித்த குணம்
அலையாமல் - புரளாமல்
அவம் - குற்றம்
அவம் செய்தல் - பழுதாக்கல், பயனின் றிப் போகச்செய்தல்
அவற்கு - அவனுக்கு
அவனி - பூமி
அவிய - மறைய, ஒழிய
அவியாத - நாசம் அற்ற

அவிர்தல் - ஒளிவிடுதல், விளங்குதல்
அவிழ்ந்தொழியும் - நீங்கிப்போகும்
அவிவு இன்றி - இடைவிடாமல்
அவை செய்து - அவயவமாகப் பிரித்து, சின்ன பின்னமாக்கி
அவையம் - அபயம், அடைக்கலம்
அழல் - நெருப்பு, கோபம்
அழல - எரியும்படி
அழலும் - நெருப்பைக் கக்கும், எரிகிற
அழறு - (அளறு) சேறு
அழிப்பு - நாசம் செய்கை
அள்ளல் - சேறு,நெருக்குதல், அடர்தல்
அளக்கிற்பார் - அளந்தறிய வல்லவர்
அளப்பு - ஒப்பு, உவமானம்
அளவு - எல்லை, முடிவு
அளவு கண்ட - ஆயுளின் எல்லையை அறிந்த, இறக்கும்படி செய்த
அளவு கண்ட நெறி - அளந்த விதம், அளவிட்டுவைத்த உபாயம்
அளவு போந்த - அளவுக்கு உட்பட்ட
அளறு - சேறு
அளிந்த - பிரியமான
அளிப்பு - கருணை செய்கை, காப்பாற்றுகை
அற - மிகவும்
அறம் முதல் நான்கு - அறம், பொருள், இன்பம், வீடு
அறிகிற்போம் - அறிவோம்
அறிதியே - அறிந்திருக்கின்றாயோ
அறிதுயில் - யோகநித்திரை
அறியாமை - அறியாமல்
அறிவானும் - அறிந்து கொள்வானும், அறிந்து விடுவானும், அறியமாட்டாதவன் என்றபடி
அறுசுவை - கைப்பு, புளிப்பு, இனிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, உவர்ப்பு
அறுபதம் - வண்டு
அறைகூய் - அறை கூவி, வெற்றி முழக்கம் செய்து
அறைதல் - ஒலித்தல்
அறைபிடுதல் - அறைகூவுதல், ஜயித்தோம் என்று பேரொலி செய்தல்
அறையோ - முறையிட்டுக் கூறும் வார்த்தை, ஜயசப்தம்
அன்றி - கோபித்து
அன்றிக்கொண்டு - கோபத்தை மேற்கொண்டு, சீறிக்கொண்டு
அன்பு - பக்தி
அன்னன்ன - அப்படிப்பட்ட
அன்னீர - ஒத்த
அனகன் - குற்றமற்றவன்
அனங்கவேள் - மன்மதன்
அனந்தன் - ஆதிசேஷன்
அனல் - நெருப்பு, தீ
அனையீர்களாய் - ஒத்தவர்களாய்

## ஆ

ஆ - ஆக
ஆக்கை - சரீரம்
ஆகத்தான் - மார்பை உடையவன்
ஆகம் - உடம்பு, மார்பு, மனம்
ஆகிடுகாண் - வருக, உண்டாகட்டும்
ஆட்டவும் - நீராட்டவும்
ஆட்பட்டார் - அடிமைப்பட்டார்
ஆட்படுதல் - அடிமைப்படுதல், அடிமை செய்தல்
ஆட்பலி - நாபலி, தங்கள் தலையை அறுத்து இடும் பலி
ஆட்பெற்று - அடிமையாயிற்று
ஆடாதன - நடவாதன
ஆடுவான் - ஆடும் பொருட்டாக
ஆண்டையார் (யாண்டையார்) - எங்குள்ளார்
ஆணிப் பொன் - ஓட்டற்ற பொன், சிறந்த பொன்
ஆதானும் - யாதானும், எதுவாயினும்
ஆதி - முதல், ஆதியாகிய இறைவன்
ஆதி நடு அந்தி - காலை,நண்பகல், மாலை
ஆப்பு - பந்தம், கட்டு
ஆப்புண்ணுதல் - கட்டுப்படுதல்
ஆம் - ஆகும்
ஆம் ஆறு - தக்க உபாயம்
ஆம் கை (அம்கை) - அழகிய கை
ஆமாறு - தகுதியாக

ஆமே - ஆமோ, முடியுமோ
ஆய் - ஆய்தல், ஆராய்தல்
ஆய்ச்சி - இடைச்சி, யசோதை
ஆய்த் தாய் - இடைச்சியாகிய யசோதை
ஆய்ந்து - சிந்தித்து, நுணுகி அறிந்து
ஆய் மகள் - ஆயர்மகள், நப்பின்னைப் பிராட்டி, நீளாதேவி
ஆய் மலர் - ஆராய்ந்து கொண்டமலர்
ஆயவர் - ஆயர் குலத்தவர், கண்ணன்
ஆயானுக்கு - ஆகியவனுக்கு
ஆயிரவாய் நாகம் - ஆதிசேடன்
ஆயோ - பறவைகளை ஓட்டுவதற்காகக் கூறும் சொல்
ஆவார் - ஆகின்றவர், ஒப்பாவார்
ஆர் - யார், மிகுதி, திரட்சி, கூர்மை
ஆர்த்த - (ஆர்த்தல்) கட்டிய
ஆர்த்தல் - ஆரவாரித்தல், ஒலித்தல்
ஆர்தல் - நிறைதல்
ஆர்ந்தேன் - பொருந்தினேன், பரிபூர்ணன் ஆனேன்
ஆர்வம் - விருப்பம், அன்பு காரணமாகப் பிறப்பது, சிநேகம்
ஆர - நிறைய
ஆரம் - முத்துமாலை, மாலை, சந்தனம்
ஆரவாரம் - சப்தம்
ஆராமம்-சோலை, உத்தியான வனங்கள்
ஆரானும் - யாரானும், யார்ஆயினும்
ஆரும் - (பொறுத்தற்கு) அரிய
ஆரே - யாரே.
ஆல் - ஆச்சரிய அசைநிலை, ஆலமரம்
ஆலம் - விஷம், ஹாலாஹலம் என்ற விஷம்
ஆலம் அமர் கண்டம் - விஷம் பொருந்திய கழுத்து
ஆவார் - ஒப்பாவார்
ஆவான் - ஆதற்கு
ஆவி - மனம், உயிர்
ஆழ்வார் - முழுகிப்போவார்
ஆழி - கம்பீரம், சக்கரம், அளவு, கடல், கூடல் சுழி, தேர்ச் சக்கரம்
ஆழி நெஞ்சே - கம்பீரத்தன்மையுடைய நெஞ்சே, ஆழ்ந்துள்ள மனமே
ஆழியாய்க்கு - சக்கரத்தையுடைய உனக்கு
ஆழியான் - கடலில் துயில்பவன்
ஆள் - மனிதன், அடிமை, வீரன்
ஆள் அற்றப்பட்டு - வேறு ஆள் இல்லாமையால்
ஆளாய் - அடிமையாய்
ஆளி - யாளி, ஒருவகை மிருகம்
ஆளி - ஆள்பவன்
ஆற்ற - மிகவும்
ஆற்றல் - வலிமை
ஆற்றங்கரை - கபிஸ்தலம் என்னும் திருப்பதி
ஆற்றாதாய் - நிறையாதவனாய், திருப்தியில்லாதவனாய்
ஆற்றான் - திருப்தியடையான், சகிக்கமட்டான்
ஆற்றேன் - வல்லமையுடையேன் அல்லேன், பொறுக்கமாட்டேன்
ஆறிய - தணிந்த
ஆறு - வழி, முறை, விதம்
ஆன் - பசு
ஆன் ஆய்ச்சி - பசுவை வளர்க்கும் இடைப் பெண்
ஆன் விடை - காளை

## இ

இசைந்த - ஏற்றதான, பொருத்தமான
இசையிலம் - உடன்பட்டுச் சொல்லப் பெற்றோம் அல்லோம்
இசையும் - பொருந்தும்
இசையுங்கொல் - பொருந்துமோ
இசைமின் - சொல்லுங்கள்
இட்ட - கொடுத்த
இடங்கை - இடக்கை
இடத்தல் - பிளத்தல், குத்தி எடுத்தல், ஒட்டுவிடுவித்து எடுத்தல், பிளந்து எடுத்தல்
இடந்த - பிளந்த, கிழித்த
இடந்தாய்க்கு - குத்தி எடுத்த உனக்கு
இடந்தான் - குத்தி எடுத்தான்
இடந்து - குத்தி எடுத்து
இடம்பாடு - பெருமை
இடர் - துன்பம், துக்கம்

இடுக்குண்ட - நெருக்குண்டன
இடை - நடு
இடைகழி - நடுக்கட்டு, மத்தியப் பிர தேசம்
இடைநின்ற - இடைப்பட்ட
இணங்கும் - ஒக்கும், ஒத்துச் சொல்லப் படும், சேர்த்துச் சொல்லப்படும்
இணர் - பூங்கொத்து
இணை - சேர்ந்திருத்தல்
இதயம் - இருதயம், உட்கருத்து
இப்பிறவியாவது - இந்த ஸம்ஸாரம்
இமம் - பனி
இமை - இமைக்கும் பொழுது, சிறிது நேரம்
இமை - பார், நிச்சயித்திரு, அறி
இமைக்கும் - ஒளிவிடும்
இமையாத கண் - இமைத்தல் செய் யாத மனக்கண், ஞானக் கண்
இமையாது - இமை கொட்டாமல்
இயங்கும் - சஞ்சரிக்கும், உலாவும்
இயல் - கம்பீரம், தன்மை, சப்தம்
இயல்பாக - தக்கபடி, தகுதியாக
இயல்வு - உபாயம், தகுதி, ஒப்பு
இயல்வே - இயற்கையாமோ
இயலாவார் - இயல்புடையார், ஆச்ர யிக்கத்தக்கவர்
இயன்ற - பொருந்திய
இரவி - சூரியன்
இரியும் - தோற்கும்
இரு - பரந்த, பெரிய
இருக்கு - இருக்குவேதம்
இருகால் - இருநுனி
இருசுடர் - சூரிய சந்திரர்
இருந்த - உள்ளன
இருந் தமிழ் நல்மாலை - சிறந்த தமிழ்ப் பாமாலை
இருநிதியம் - பெருஞ்செல்வம்
இரு பிறப்பு ஒரு மாண் - இருபிறப்பாள ரான ஒப்பற்ற பிராமண பிரமசாரி
இருஞ்சிறைப்புள் - பெரிய சிறகுடைய பறவை
இரும்சோலை - திருமாலிருஞ்சோலை
இருவகைப் பயன் - சுக துக்கம்
இருவிசும்பு - பரந்த ஆகாயம்
இருவினைப்பாசம் - புண்ணியம் பாவம் என்னும் கரும பாசங்கள்
இருள் - அஞ்ஞானம்
இரைக்கும் - சப்திக்கும்
இல் - இருப்பிடம்
இல் மொழி - இல்லாத மொழி
இலக - பிரகாசிக்கும்படி, விளங்க
இலகுதல் - ஒளி விடுதல்
இலங்குதல் - விளங்குதல்
இலை - இல்லை
இவ்வகாலம் - இந்தக் காலம்
இழப்போம் - இழக்கிறோம்
இழிந்தேன் - இறங்கினேன், விடு பட்டேன்
இழிய - இறங்க, பாய
இழைப்பன் திருக்கூடல் - கூடல் சுழி களைப் பூமியில் வரைவேன்
இழைப்பு அரிய - நினைத்தற்கு அரிய
இளக - மறைய
இளங்குமரர் - நித்திய சூரிகள், என்றும் இளமையாய் விளங்குகிற இறைவர்
இளங்கிரி - சிறிய மலை
இளங்கோயில் - பாலாலயம்
இளவாடை - மந்தமாருதம்
இளைக்கில் - தளர்ச்சியுற்றால்
இளையாப்பாய் - தளரமாட்டாய்
இறக்கவும் - மிகுதியும்
இறத்தல் - அழிதல்
இறவாத - அழியாத
இறுகின்றது - முடிகின்றது
இறுத்தல் - முறித்தல்
இறுத்து - முறித்து
இறுமாவார் - கர்வம் கொள்ளமாட்டார்
இறை - கடவுள், தலைவன், ஏகதேசம்
இறை - சிறிது, கொஞ்சம்
இறைஞ்சும் - வணங்கும்
இறைபாடி - தங்கும் படைவீடு, ராஜ தானி
இறையேனும் - கொஞ்சமும், சிறிதள வாவது
இன் - இனிய, அழகிய
இன்பக் கடல் ஆழி - இன்ப சமுத்திரம்
இன்பு - இன்பம்
இன்று - இன்றாக, இப்பொழுதாக

ஸ்ரீ :

# பாடல் முதல்குறிப்பு அகராதி

ஸ்ரீ:

# திவ்யப் பிரபந்தப் பாசுரப்படி இராமாயணம்

(பெரியவாச்சான் பிள்ளை)

திரு மடந்தை, மண் மடந்தை இருபாலும் திகழ, நலம் அந்தம் இல்லது ஓர் நாட்டில், அந்தம் இல் பேரின்பத்து அடியரோடு, ஏழ் உலகும் தனிக் கோல் செல்ல, வீற்றிருக்கும், அயர்வு அறும் அமரர்கள் அதிபதியான அணி ஆர் பொழில் சூழ் அரங்க-நகர் அப்பன், அலை நீர்க் கடலுள் அழுந்தும் நாவாய்போல் ஆவார் ஆர் துணை என்று துளங்கும் நல் அமரர் துயர் தீர, வல் அரக்கர் வாழ் இலங்கை பாழ்படுக்க எண்ணி; மண் உலகத்தோர் உய்ய, அயோத்தி என்னும் அணி நகரத்து வெங் கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்கு ஆய்; கௌசலை-தன் குல மதலை ஆய்; தயரதன்தன் மகன் ஆய்த் தோன்றி; குணம் திகழ் கொண்டல் ஆய்; மந்திரம் கொள் மறை முனிவன் வேள்வி காக்க நடந்து வந்து; தனை எதிர்த்த தாடகைதன் உரம் கீண்டு; வல் அரக்கர் உயிர் உண்டு; கல்லைப் பெண் ஆக்கி; கார் ஆர் திண் சிலை இறுத்து; மைதிலியை மணம் புணர்ந்து; இரு பத்து ஒருகால் அரசு களை கட்ட மழுவாளி வெவ் வரி நல் சிலை வாங்கி வென்றி கொண்டு, அவன் தவத்தை முற்றும் செற்று; அம் பொன் நெடு மணி மாட அயோத்தி எய்தி; அரி அணைமேல் மன்னன் ஆவான் நிற்க:

கொங்கை வன் கூனி சொல் கொண்ட கொடிய கைகேயி வரம் வேண்ட, அக் கடிய சொல் கேட்டு மலக்கிய மா மனத்தனன் ஆய், மன்னவனும் மறுது ஒழிய, 'குலக்குமரா! காடு உறையப் போ' என்று விடை கொடுப்ப, இந் நிலத்தை வேண்டாது; ஈன்று எடுத்த தாயரையும், இராச்சியமும் ஆங்கு ஒழிந்து; மைவாய களிறு ஒழிந்து; மா ஒழிந்து; தேர் ஒழிந்து; கலன் அணியாதே; காமர் எழில் விழல் உடுத்து; அங்கங்கள் அழகு மாறி; மான் அமரும் மென் நோக்கி வைதேவி இன் துணையா; இளங்கோவும் வாளும் வில்லும் கொண்டு பின் செல்ல; கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்து போய்; பத்தி உடைக் குகன் கடத்த, கங்கைதன்னைக் கடந்து; வனம் போய்ப் புக்கு; காயோடு நீடு கனி உண்டு; வியன் கான மரத்தின் நீழல், கல் அணைமேல், கண் துயின்று, சித்திரகூடத்து இருப்ப; தயரதன்-தான், 'நின் மகன்

மேல் பழி விளைத்திட்டு, என்னையும் நீள் வானில் போக்க, என் பெற்றாய் ? கைகேசி ! நானும் வானகமே போகின்றேன் ' என்று, வான் ஏற, தேன் அமரும் பொழில் சாரல் சித்திரகூடத்து, ஆனை, புரவி, தேரொடு, கால்-ஆள் அணிகொண்ட சேனை, சுமந்திரன், வசிட்டருடன் பரத நம்பி பணிய, தம்பிக்கு மரவடியை வான் பணயம் வைத்து ; குவலயத் துங்கக் கரியும், பரியும், இராச்சியமும் எங்கும் பரதற்கு அருளி ; விடை கொடுத்து ; திரு உடைய திசைக் கருமம் திருத்தப் போய் ; தண்டகாரணியம் புகுந்து :

மறை முனிவர்க்கு ' அஞ்சேல்மின் ' என்று அருள் கொடுத்து ; வெங் கண் விறல் விராதன் உக, வில் குனித்து; வண் தமிழ் மா முனி கொடுத்த வரி வில் வாங்கி ; புலர்ந்து எழுந்த காமத்தால், ' சீதைக்கு நேர் ஆவன் ' என்ன, பொன் நிறம் கொண்ட சுடு சினத்த சூர்ப்பணகி கொடி மூக்கும் காது இரண்டும் கூர் ஆர்ந்த வாளால் ஈரா விடுத்து ; கரனோடு தூடணன்-தன் உயிரை வாங்கி ; அவள் கதறி, தலையில் அம் கை வைத்து, மலை இலங்கை ஓடிப் புக ; கொடுமையின் கடு விசை அரக்கன், அலை மலி வேல்கணாளை அகல்விப்பான், ஓர் உரு ஆய மானை அமைத்து, செங்கல் பொடிக் கூறை, சிற்றெயிற்று, முற்றல் மூங்கில் மூன்று தண்டத்தன் ஆய், வஞ்சித்து, இலைக் குரம்பில் தனி இருப்பில் கனி வாய்த் திருவினைப் பிரித்து, நீள் கடல் சூழ் இலங்கையில் அரக்கர் குடிக்கு நஞ்சு ஆகக் கொண்டு போய், வம்பு உலாம் கடி காவில் சிறையா வைக்க ; அயோத்தியர் கோன் மாய மான் மாயச் செற்று ; அலை மலி வேல்-கண்ணாளை அகன்று, தளர்வு எய்தி ; சடாயுவை வைகுந்தத்து ஏற்றி ; கங்குலும் பகலும் கண் துயில் இல்லாக் கானகம் படி உலாவி உலாவி ; கணை ஒன்றினால் கவந்தனை மடித்து ; சவரி தந்த கனி உவந்து :

வன மருவு கவி அரசன் காதல் கொண்டு ; மரா மரம் ஏழ் எய்து ; உருத்து எழு வாலி மார்பில் ஒரு கணை உருவ ஓட்டி ; கருத் துடைத் தம்பிக்கு இன்பக் கதிர்முடி அரசு அளித்து ; வானரக் கோனுடன் இருந்து, வைதேகி-தனைத் தேட விடுத்த திசைக் கருமம் திருத்த, திறல் விளங்கு மாருதியும் மாயோன் தூது உரைத்தல் செப்ப :

சீர் ஆரும் திறல் அனுமன் மா கடலைக் கடந்து ஏறி, மும் மதில் நீள் இலங்கை புக்கு, கடி காவில் வார் ஆரும் முலை மடவாள் வைதேவி-தனைக் கண்டு, ' நின் அடியேன் விண்ணப்பம் கேட்

டருளாய் : அயோத்தி-தனில் ஓர் இடவகையில் எல்லியம்போது இனிது இருத்தல், மல்லிகை மா மாலை கொண்டு அங்கு ஆர்த்ததும் ; கலக்கிய மா மனத்தனள் ஆய்க் கைகேசி வரம் வேண்ட, மலக்கிய மா மனத்தனன் ஆய் மன்னவனும் மறுது ஒழிய, 'குலக் குமரா! காடு உறையப் போ' என்று விடை கொடுப்ப, இலக்குமணன்-தன்னொடும் அங்கு ஏகியதும் ; கங்கை-தன்னில் கூர் அணிந்த வேல் வலவன் குகனோடு சீர் அணிந்த தோழமை கொண்டதுவும் ; சித்திரகூடத்து இருப்பப் பரதநம்பி பணிந்ததுவும் ; சிறு காக்கை முலை தீண்டி மூவுலகும் திரிந்து ஓடி, 'வித்தகனே ! இராமா ! ஓ ! நின் அபயம்' என்ன, அத்திரமே அதன் கண்ணை அறுத்ததுவும் ; பொன் ஒத்த மான் ஒன்று புகுந்து, இனிது விளையாட, நின் அன்பின் வழிநின்று, சிலை பிடித்து, எம்பிரான் ஏக, பின்னே அங்கு இலக்குமணன் பிரிந்ததுவும் ; அயோத்தியர்-கோன் உரைத்த அடையாளம், ஈது அவன் கை மோதிரமே' என்று அடையாளம் தெரிந்து உரைக்க, மலர்க் குழலாள் சீதையும் வில் இறுத்தான் மோதிரம் கொண்டு, 'அனுமான் ! அடையாளம் ஒக்கும்' என்று உச்சிமேல் வைத்து உகக்க, திறல் விளங்கு மாருதியும் இலங்கையர்-கோன் மாக் கடி காவை இறுத்து, காதல் மக்களும் சுற்றமும் கொன்று, கடி இலங்கை மலங்க எரித்து, அரக்கர் - கோன் சினம் அழித்து, மீண்டு, அன்பினால் அயோத்தியர் - கோன் தளிர் புரையும் அடி-இணை பணிய :

கான எண்கும் குரங்கும் முசுவும் படையா, கொடியோன் இலங்கை புகல் உற்று ; அலை ஆர் கடற்கரை வீற்றிருந்து ; செல்வ விபீடணற்கு நல்லன் ஆய் ; விரி நீர் இலங்கை அருளி ; சரண் புக்க குரை கடலை அடல் அம்பால் மறுக எய்து ; கொல்லை விலங்கு பணி செய்ய, மலையால் அணை கட்டி ; மறு கரை ஏறி ; இலங்கை பொடி ஆக, சிலை மலை செஞ் சரங்கள் செல உய்த்து ; கும்பனொடு நிகும்பனும் பட, இந்திரசித்து அழிய, கும்பகர்ணன் பட, அரக்கர் ஆவி மாள, அரக்கர் கூத்தர்போலக் குழமணிதூரம் ஆட, இலங்கை மன்னன் முடி ஒருபதும், தோள் இருபதும் போய் உதிர, சிலை வளைத்து ; சர மழை பொழிந்து ; கரம் துணித்து ; வென்றி கொண்ட செருக்களத்துக் கடிக் கமல நான்முகனும், கண்மூன்றத்தானும், எண்மர், பதினொருவர், ஈர்அறுவர், ஓர்இருவர், மற்றும் உள்ள வானவர் மலர்மழை பொழிந்து, மணி முடி பணிதர, அடி-இணை வணங்க, கோலத் திரு மா மகளோடு, செல்வ விபீடணன், வானரக் கோனுடன் இலங்கு மணி நெடுந் தேர் ஏறி ; சீர் அணிந்த குகனொடு

கூடி ; அங்கண் நெடு மதில் புடைசூழ் அயோத்தி எய்தி ; நல் நீர் ஆடி ; பொங்கு இள ஆடை அரையில் சாத்தி ; திருச் செய்ய முடியும், ஆரமும், குழையும் முதலா மேதகு பல்கலன் அணிந்து ; சூட்டு நன் மாலைகள் அணிந்து ; பரதனும், தம்பி சத்துருக்கனனும், இலக்குமனனும், இரவும் நன் பகலும், ஆட்செய்ய, வடிவு இணை இல்லாச் சங்கு தங்கு முன் கை நங்கை மலர்க் குழலாள் சீதையும், தானும் கோப்புடைய சீரிய சிங்காசனத்து இருந்து ; ஏழ் உலகும் தனிக் கோல் செல்ல வாழ்வித்தருளினர்.

---

ஸ்ரீ:

# திவ்யப் பிரபந்தக் கதைக் குறிப்புக்கள்

## 1. அவதாரக் கதைகள்

### மச்சாவதாரம் (ஒரு மீன் உரு ஆகி)

வானமும், நிலனும், மலைகளும், அலை கடல் குளிப்ப; அம் முது முந்நீர் வளர்ந்து, உம்பர் வள நாடு மூட; உலகம் எலாம் நெடு வெள்ளம் கொண்ட காலம், நிலையிடம் எங்கும் இன்றி, இமையோர் சரண் புக; திருமால், தான் ஒரு மீன் உரு ஆய், நீர் குழம்ப உலாவி, குல வரையின் மீது ஓடி, அகல் வான் உரிஞ்ச, அண்டத்து அப்பால் எழுந்து, இனிது விளையாடி; வியந்து, உயிர் அளித்து, உய்யக் கொண்டான்.

### கூர்மாவதாரம் (ஓர் ஆமையும் ஆகி)

மந்தர மலையை மத்தாக நாட்டி; வாசுகியை வன் கயிறாகச் சுற்றி; கடல் மறுகக் கடைந்த காலம், அமரர்கள் தொழுது எழ; அமுதம் எய்தும் அளவும், தடங் கடலுள் கார் ஆமை ஆய், பரு வரை முதுகில் சுழலத் தாங்கி; மேலும், ஆயிரம் தோளால் திசையும், விண்ணும் வெருவ, மா நிலம் குலுங்க, வெள்ளை வெள்ளம் நீலக் கடல் ஆகி முழுதும் குழம்பி அலற, கடல்வண்ணன், தானே அமுது எழ, கடல் கடைந்தான்.

விஞ்சை வானவர், சாரணர், சித்தர், வியந்து துதிசெய்ய; மாயப் பிரான், தானே பெண் உரு ஆய், அவுணரை வஞ்சித்து, உள்ள நோய் தீர் மருந்தாக அமுதினை அமரர்க்கு அருளினான்.

கடைந்த அமுதை விண்ணவர் உண்ண, கிடந்த அமுதாகிய பெருமான் அமுதினில் வந்த மின் ஒத்த பெண் அமுதைத் தன் மார்வில் மன்ன வைத்து உகந்தான்.

அலை கடல் கடைந்த அப்பொழுது, தன் கூறு கொண்ட தழல் நிற வண்ணன் நஞ்சு உண்ணக் கண்டான்.

### வராகாவதாரம் (பன்றியும் ஆகி)

ஆழப் பெரும்புனல்-தன்னுள் அழுந்திய நில-மடந்தை பொருட்டு, தரணித் தலைவன், வென்றிசேர் திண்மை விலங்கல் மா மேனி வெள் எயிற்று ஒள் எரித் தறுகண் பன்றி ஆனான்.

'சிலம்பினிடைச் சிறு பரல்போல், பெரிய மேரு திருக்குளம்பில் கணகணப்ப, திரு ஆகாரம் குலுங்க, சிலம்பு முதல் கலன் அணிந்து, ஓர் செங்கல் குன்றம் திகழ்ந்தது' எனத் தோன்றி, இமையவர் வணங்க நின்று, மண் எல்லாம் இடந்து, இலங்கு புவி மடந்தை தனைப் புல்கி, எயிற்றிடை வைத்து, அம் மடவரலை மணந்து உகந்தான்.

### நரசிங்காவதாரம் (ஓர் ஆள்-அரி உருவம் ஆகி)

எல்லையிலாத தவமும் வரமும் கருதி, அல்லல் செய்த இரணியனுக்கு அஞ்சி; இமையோர் இறைவனை அடைந்து; 'வணங்கா முடியன் உன்னை இகழ்ந்தான்; மூர்க்கன் செயலால் தளர்ந்தோம்; சரண் தா' என்ன, 'அரண் ஆவோம்; முரண் ஆனவனை முடிப்போம்' என்றான்.

பொன்பெயரோன் பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன் இறைவனது ஆயிர நாமம் ஓத, பொறுது, பிள்ளையைச் சீறி வெகுண்டு, தூண் புடைத்தான்.

அளந்திட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே, வளர்ந்திட்டது ஓர் ஆள்-அரி. அதுகண்ட பொன்னன், வயிறு அழல, வாள் உருவி, எதிர்ந்தான். வாள் எயிற்றுக் கோளரியோ, ஏனோர் அஞ்ச, வெஞ்சமத்து எரி விழித்தது.

அப்பொழுது வானோர், 'எரிந்த பைங் கண், இலங்கு பேழ் வாய் எயிற்றொடு, இது எவ் உரு!' என்று கலங்கி, இரிந்து ஓட; நாத் தழும்ப, நான்முகனும் ஈசனும் முறையால் ஏத்த; அந்தியம்போதில், வந்த ஆள்-அரி; வன் நெஞ்சத்துக் கொலைக் கை அவுணன் உளம் தொட்டு; ஒண் மார்பு-அகலம் குருதி குழம்பி, எழ; கூர் உகிர் வாளால் பிளந்து; அவன் குலமகற்கு இன் அருள் கொடுத்தது.

### வாமனவதாரம்—திருவிக்கிரமாவதாரம் (ஒரு குறள் ஆய் ஓங்கி)

தனி முதலான சக்கரப் படைத் தலைவன், விண்ணவர் வேண்ட, அவர் தம் துயர் தீர, மிகு சிறு குறளாய்க் கோலம் கொண்டு, மண்ணிடை வந்து தோன்றினான்.

நீள் நிலா வெண்குடை வாணனார், அவுணர்க்கு நாயகன், மிக்க பெரும் புகழ், நீள் முடி வெந் திறல் மாவலியின் மங்கலம் சேர் பெரு வேள்விக்கு, காணி பேணும் மாணியாய், கண்டார் இரங்க, பொங்கு இலங்கு புரி நூலும் தோலும் தாழச் சென்று, 'மூவடி மண் இன்றே தா' என இரந்தான். 'தக்கது இது அன்று' என்று தானம் விலக்கிய சுக்கிரன் கண்ணைப் பொல்லாக் குறளன் துரும்பால்

கிளறி, வாட்டம் இலா மாவலி வண் கைக்கு, தன் ஆழித் தடக்கை தாழ, நீர் ஏற்ருன்.

நீர் ஏற்றதும், அணி வளர் குறளன், அண்டம் ஊடுருவ, நிமிர்ந் தான்.

நின்றதோர் பாதம் நிலம் புதைப்ப, நீண்ட தோள் சென்று திசை அளப்ப, நெடு வான் அளவும் நீண்டான். வான் என்னும் கேடு இலா வான் குடைக்குத் தான் ஓர் மணிக் காம்பு எனத் திகழ்ந்தான்.

பின், இவ் உலகினில் பேர் இருள் நீங்க ; சுடர்த் தோள்கள் பல தழைத்து, எண் திசையும் சூழ ; இரு நிலனும், பெரு விசும்பும், தாரகையின் உலகும், தடவி, அதன் புறமும் விம்ம, வளர்ந்தான்.

பார் அகலம் திருவடியாக, பவனம் (வாயு மண்டலம்) மெய்யாக, திசைகள் எட்டும் தோளாக, அண்ட - முகடு திரு முடி யாக, பரந்து எங்கும் காட்சி தந்து, நின்ருன். நின்று, சேவடியை நீட்டி, திசை நடுங்க, விண் துளங்க, அம்பரம் ஊடு அறுத்து, உலகு அளந்தான். ஓங்கி, உலகு அளந்த உத்தமனை நோக்கி, மாவலி மகன் நமுசி, ' வஞ்சித்தாய்! என் இது மாயம்? என் அப்பன் அறிந்திலன்; முன்னைய வண்ணமே கொண்டு அளவாய் !' என்ன, அவனை வானில் சுழற்றினன் மின்னும் முடியன்.

கழல்-தலம் ஒன்றே நிலம் முழுது ஆயிற்று. ஒரு கழல் போய், எல்லா விசும்பும் நிழல் தர, நிறைந்தது. இடம் போதாது—என் கொலோ !

' எஞ்சிய ஒன்றும் தருக ' என்று, மாவலியைப் பொன் இலங்கு திண் விலங்கு இட்டு, சிறை வைத்தான். நெடுமையால் உலகு ஏழும் பாங்காய் அளந்து, காணி முற்றும் கொண்ட மாயக் குறளன், ' வாமனன் மண் இது !' என மெய்ப்பித்து, ' மூவுலகு அளந்த சேவடியோய் !' என அமரரும், முனிவரும், தொண்டரும், தொழுது எழ நின்ருன்.

### பரசுராமாவதாரம் (முனிந்த முனி ஆகி)

வையகம் முழுதும் முறைகெடச் செய்த மற மன்னரை, முனி யாய் வந்து, முனிந்து ; மழுவே படையாக, மூ-எழுகால் அம் மன்னர் மணிமுடி பொடி படுத்து ; அரசு களைகட்டு ; அவர்-தம் குருதிப் புனல் குளித்து ; திருக் குலத்தில் இறந்தோர்க்குத் திருத்தி (திருப்தி) செய்து ; வையம் உய்வித்தான்.

செருக்களத்தே மன்னர் எலாம் திறல் அழிந்து, அவியச் செற்ற வேந்தன் (கார்த்த - வீரியன்) பகைத்து எதிர் நிற்க, அவன் சினத் தோள் ஆயிரமும் அழித்து, சிரம் துணித்தான்.

## இராமாவதாரம் (சீற்றம் இலாத எம் அரசு ஆகி)

**1. திருவவதாரம் :** செங்கண் நெடுங் கருமுகிலை, தங்கள் தனி முதல்வனை, தேவர்கள் வேண்டி இரக்க, விண் முழுதும் உய்யக் கொண்ட வீரன், வெங் கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய், உலகு அனைத்தும் விளக்கும் சோதியாய், தசரதனுக்கும் கௌசலைக்கும் மா மகன் ஆனான். தசரதன் பெற்ற மரதக மணித் தடம் தாசரதி எனப் பெயர் பெற்றான்.

**2. வேள்வி காத்தல் :** மாமுனி (விசுவாமித்திரன்) வேள்வி காக்கச் செல்லும் நெறியில் வந்து எதிர்ந்தாள் வல் அரக்கர் குலப் பாவை, திண் திறலாள் தாடகை. அவள் உரம் உருவ, குருதி பொழிய, அடு சிலையில் சுடு சரம் துரந்து, அந் நீர்மையிலாளைத் தென் உலகம் ஏற்றுவித்தான்.

இடையூறு விளைத்த வல் அரக்கர் உயிர் உண்டு, மா முனி வேள்வி காத்து, அவபிரதம் ஆட்டினான்.

**3. வில் முறித்தல் :** தக்க பெரும் புகழ்ச் சனகன் மிக்க பெருஞ் சபை நடுவே, 'நல் நேரிழையோடு உடனாய வில்' என்ன, செவ் வரி நல் கரு நெடுங் கண் சீதைக்காகி, சின விடையோன் (சிவபெருமான்) சிலை இறுத்து, சனகன் திரு மருகன் ஆயினான்.

**4. பரசுராமனது செருக்கு அழித்தல் :** 'என் வில் வலி கண்டு போ' என்று எதிர் வந்த பரசுராமனது வில்லொடு, தவத்தையும் முற்றும் வாங்கி, தனது ஆக்கினான்.

**5. கான் புகுதல் :** இளமையில் இராமன், விளையாட்டாக, கூனி கூன் சிதைய, கை வில்லால் உண்டை தெறித்தான். அது குறித்து வன்மம் கொண்டிருந்த கொடுங் கூனியின் கடுஞ் சொல் கேட்டு, கலங்கிய மனத்துச் சிறிய தாய் கைகேயி, கூற்றுத் தாய் ஆகி, தசரதனிடம் வரம் வேண்ட, மயங்கிய மனத்து மன்னவனும் மறுது ஒழிய, அரி-அணை ஏற இருந்தவனை, 'நெடுங் கானம் படரப் போ' என்றாள்.

இராமனும் சிற்றவை பணியால், முடி துறந்து; கரியும், பரியும், பார் ஆளும் படர் செல்வமும், பரதநம்பிக்கு அருளி; பூவை போலும் மெல்லியலும், இளங்கோவும், பின் தொடர; தொல் கானம் நோக்கி எழுந்தான்.

பெற்ற தாய் பின் தொடர்ந்து, 'எம் பிரான்' என்று அழ; சுற்றத்தாரொடு நகரம் எலாம் தொடர்ந்து புலம்ப; இராமன் அவர்கள் வருத்தமும், தன் அருமையும், பாராது; தந்தையின்

மெய்யுரை காக்க, வள நகர் துறந்து, கொடிய கான் தொடுத்த நெறி போனான்.

**6. தசரதன் புலம்பல்:** தனயன் கான் புக, தசரதன், 'எம் இராமாவோ! நன் மகனே! கைகேசி சொல் கேட்டு, நான் உன்னை நன்றாக நானிலத்தை ஆள்வித்தேன்! என் வெவ்வுரை கேட்டு எவ்வாறு நடந்தனை? என் செய்கேன்? வல் வினையேன் மனம் உருக்கும் மகனே! மெல் அணை மேல் இனிது துயின்ற நீ கல் அணை மேல் கண் துயிலக் கற்றனையோ!' என்றெல்லாம் புலம்பலுற்றான்.

நன் மகன் மீதும், மெய்யுரை மீதும், ஒருங்கே காதல் கொண்டு, 'வா' என்றும், 'போ' என்றும், 'இன்னம் வந்து ஒருகால் கண்டு போ' என்றும் முரண்படப் புலம்பினான்.

கானக வாழ்வின் இன்னல்களைத் தன் மனக் கண் முன் கண்டு, 'அரும் பாவி சொல் கேட்ட பெரும் பாவியேன் மகனே! போகின்றாய்; அந்தோ! என் செய்கேன்?' என்று கலங்குவான்.

'இது தகவோ? சுமந்திரனே! வசிட்டனே! சொல்லீர் நீரே' என்பான்.

'மகனையும் மருகியையும் வனத்தில் போக்கி, என்னையும் வானில் போக்கி, நின் மகன்மேல் பழி விளைத்திட்டு, என் பெற்றாய், கைகேசி! நீயும் இரு நிலத்தில் இனிதாக இருக்கின்றாயே!' என்பான்.

இறுதியில், கானகம் சென்ற இராமனை நினைத்து, 'நீ துறந்த வள நகரைத் துறந்து, நானும் வானகமே மிக விரும்பிப் போகின்றேன், மனு குலத்தார்-தங்கள் கோவே!' என்று கதறினான்.

**7. குகனோடு தோழமை:** இராமன் கங்கைக் கரையில் குகனைக் கண்டு, 'ஏழை, ஏதலன், கீழ்-மகன்' என்று பாராது, இரங்கி, இன் அருள் புரிந்தான். 'சீதை உன் தோழி' என்றும், 'உன் தம்பியாகிய இலக்குமணன் என் தம்பி' என்றும், 'தோழன் நீ' என்றும் கூறி, அக் கூர் அணிந்த வேல் வலவனுடன் சீர் அணிந்த தோழமை கொண்டான்.

**8. பரதனுக்குப் பாதுகை ஈந்தது:** சித்திரகூடத்து இருந்த போது, பரதநம்பி வந்து அடிபணிந்தான். அந் நம்பிக்குத் தன்னுடைய அடிநிலையும் (பாதுகையும்) அரசும் ஈந்தான்.

**9. விராதன் வதம்:** வரை நெடுந் தோளும், படை ஆர் திண் கையும், கொடிய கண்களும் ஆய் வந்த விராதன் மடிய வில் வளைத்தான்.

**10. அகத்திய முனிவரிடம் வில் வாங்கியது :** வண் தமிழ் மா முனி கொடுத்த வரி வில் வாங்கிக் கொண்டான்.

**11. சூர்ப்பணகையின் அங்க பங்கம் :** மான் அமரும் மென் நோக்கி வைதேவி இன் துணை ஆக, கான் அமரும் கல் அதர் போய், காடு உறைந்த காலத்து ; தென் இலங்கையாட்டி, தீ அரக்கர் குலப் பாவை, மன்னன் இராவணன் நல் தங்கை, மலை போல் உருவினள், வாள் எயிறு மின் இலக ; 'நான் சீதைக்கு நேர் ஆவேன் !' என்று வந்தாள். அக் கரு மகள் பிலம் கொள் வாய் திறந்து, அடுத்து, ஆர்த்து எழுந்தாள். இவ்வாறு தன்மேல் எதிர்ந்து வரும் அவளது வெம் சினக் கொடி மூக்கும், காது இரண்டும், கூர் ஆர்ந்த வாளினால் அரிந்து, அவள் தன் பில வாயால் அலறிக் கதறி, ஓடி, தலையில் அம் கை வைத்து, மலை இலங்கை புகச் செய்தான்.

**12. கரன் ஆதியர் வதம் :** தண்டக-வனத்தில் தன்னை எதிர்த்து வந்த கரன் சிரம் துணித்து, தூடணன் ஆதியர் உயிரையும் வாங்கினான். தன் விற்கை வீரம் தோன்ற, கவந்தனையும் மாய்த்தான்.

**13. மாய மானை மாய்த்தது:** செம் பொன் நீள் முடி இராவணக் கொடியோன், சித்தம் சீதைபால் வைத்து, மாரீசனை நோக்கி, 'நீ உருவம் கரந்து, அலை மலி வேல் கண்ணாளை அகல்விப்பதற்கு, இலை மலி பள்ளி (பர்ணசாலை) எய்துவாய்' என்றான். அவனும் பொன் ஒத்த மான் ஆகிப் புகுந்து, இனிது விளையாட, இராமன்,சீதையின் அன்பின் வழிநின்று, சிலை பிடித்து, மான் பிடிக்கச் சென்றான். புள்ளி மான் துள்ளி ஓட, முனிந்து தொடர்ந்து, மாச் சிலை வளைத்து, வாளி தொடுத்து, அம் மாய மான் மாய, வீழ்த்தினான்.

அதன் பின், இலக்குமணனும் சீதை-காவலை விட்டுப் பிரியவே, இராமன் சீதையைப் பிரிய நேர்ந்தது. அன்று அரக்கர் கோமானும் தகவிலி, தண்டகாரணியம் புகுந்து, தையலைக் கவர்ந்து சென்று, கடி காவில் சிறை வைத்தான்.

**14. சடாயுவுக்கு வைகுந்தம் அருளுதல் :** வைதேகி பிரிந்த பின், இராமன் தளர்வு எய்தி, (இராவணனால் தாக்குண்ட) சடாயுவை வைகுந்தம் ஏறச் செய்தான்.

**15. சுக்கிரீவன் தோழமை :** வனம் மருவு கவி அரசன் (சுக்கிரீவன்) மீது காதல் கொண்டு (தோழமை கொண்டு), கணை ஒன்றால் மராமரம் ஏழும் துளைபடச் செய்தான்.

பைங் கண் விறல் செம் முகத்து வானரக் கோன் வாலி உருத்து எழ, அவன் தன் மதம் அழிய, மார்பு துளைபட, சரம் துரந்து, இளையவனுக்கு அரசு அருளி, வானரக் கோன் ஆக்கினான்.

**16. அனுமன் சீதையைத் தேடல்:** அயோத்தியர் கோன் (இராமன்) வானரக் கோனுடன் (சுக்கிரீவனுடன்) இருந்து, சீதையைத் தேடுவதற்காக, அடையாளங்கள் மொழிந்து, அனுமனைத் தென் திசைக்கண் அனுப்பிவைத்தான்.

அனுமன் கடல் கடந்து ஏறி, கடி மதில் இலங்கை மேவும் கடிகாவில் (அசோகவனத்தில்) சிறை இருந்த கிளி மொழியாளைக்கண்டான். கண்டு, தான் அறிந்துவந்த அடையாளங்களை விவரித்து உரைத்தான்.

எல்லியம் போதில் இனிது இருக்கும்போது, சீதை மல்லிகை மா மாலை கொண்டு இராமனைக் கட்டி வைத்ததையும், சித்திரகூடத்து இருக்கும்போது, சிறு காக்கை சீதைபால் தவறு இழைக்க, இராமன் அத்திரம் (அஸ்திரம்) கொண்டு எறிய, அக் காகம், அனைத்து உலகும் திரிந்து ஓடி, புகலிடம் இன்றி, மீண்டு வந்து, 'வித்தகனே! இராமா! ஓ! நின் அபயம்' என்று முறையிடவே, அந்த அத்திரம் கண்ணை அறுத்ததுடன் அமையுமாறு, அருளப் பெற்றதையும், சிறப்பாகக் குறிப்பிட்டான்.

இவ்வாறு மொழிந்து, 'ஈது அவன் கை மோதிரமே' என்றான். சீதையும் வில் இறுத்தான் மோதிரம் கண்டு, 'அனுமான்! அடையாளம் ஒக்கும்' என்று, அம் மோதிரத்தை உச்சிமேல் வைத்து உகந்தனள்.

**17. அனுமன் தூது:** அனுமன் தூது மொழிந்ததும், அரக்கன், 'தூது வந்த குரங்கே! உங்கள் தோன்றலின் தேவியை விட்டுக் கொடேன்' என்றான்.

**18. இலங்கை எரி ஊட்டுதல்:** பின்னர் அனுமன் இலங்கையர் கோன் சினம் அடங்க, செல்வம் மாள, கடி கா இறுத்து, சுற்றம் கொன்று, நகரும் ஈடு அழிய, ஒள் எரி மண்டி உண்ணச் செய்தான்.

இவ்வாறு இலங்கையை வேவித்து, அனுமன் மீண்டு வந்து இராமன் அடி-இணை பணிந்தான்.

**19. அணை கட்டுதல்:** பரந்த கடலை இரந்து நின்றும், வழி பெறாது, அந்தக் கைமேல் அலை எறிந்து மோதக் கண்டு, அப் படு கடல் கலங்கி வெந்துபோக, சிலை வளைத்து, சுடு சரம் (அழல் அம்பு) தொடுத்தான்.

கடல் வழிபட்டு வழி விட, தான் ஆள் உகந்த குரங்கினத்தால் அதை நெருக்கி அடைக்க ஏவினான்.

குரங்குகள் தலையால் மலைகளைத் தாங்கிச் சென்று, அம் மலைகளும் மரங்களும் புகப் பெய்து, துவலை நிமிர்ந்து வான் அணவ, கடலைத் தூர்த்து, அணை கட்டின.

குரங்குகள் மலையைத் தூக்கக் கண்ட அணில் நீரில் குளித்து, மணலில் புரண்டு, ஓடிவந்து உதிர்த்து, கள்ளங் கவடு அற்ற உள்ளத்துடன், தானும் அணை கட்ட உதவியது. அணை கட்டி முடிந்ததும், இராமன் குரக்கினப் படையொடு குரை கடலின் மீது போய், ஆழி சூழ் இலங்கை என்றும், மலை மீது இயன்ற மதிள் இலங்கை என்றும், பகலவன் மீதியங்காத இலங்கை என்றும், பேர்பெற்ற பேரூரை அடைந்தான்.

**20. போர் :** வையம் எல்லாம் உடன் வணங்க, வணங்கா மன்னன் ஆகி நின்றவனை நோக்கி, 'நங்கை நம் அரக்கர் குடிக்கு நஞ்சு!' என்று அவன் தம்பியே (விபீஷணன்) சொன்னான். கனி வாய்த் திருவினைப் பிரித்த கடுவிசை அரக்கனோ எரிவிழித்து, 'தரணியாளன் என்று மானிடன் எழுந்தான்; அது கண்டு தரித்திருப்பானோ அரக்கர் கோன்?' என்று போருக்கு எழுந்தான். ஆனை, புரவி, தேர், காலாள், அணிகொண்ட சேனைத் தொகையுடன் வந்து, பொருதான்.

இராமனோ, கானில் திரியும் கரடியும், குரங்கும், முசுவும் படைத் துணையாக, அடல் அரக்கர் மானம் அழிய, எதிர்த்தான். (இலக்குமணனது) அம்பின் வாய்ப்பட்டு, ஆற்றகில்லாது, இந்திரசித்து அழிந்தான்.

கும்பகர்ணன் கூற்றத்தின் வாய் வீழ்ந்தான். கும்பனோடு நிகும்பனும் பட்டான்.

காற்றிடைப் பூளை போல், அரக்கர் சேனை சிதறுண்டது. 'ஆஆ' என்று இரங்காது உலகத்தை அலைக்கும் அசுரர் வாழ்நாள் மேல் தீ வாய் அம்புகள் மழைபோல் பொழிய, இலங்கை மீண்டும் எரி உண்டது.

வானுளாரையும் வலிமையால் நலிந்த இலங்கையார் கோனின் பரு முடிகளை, அவ் வானவர் உகப்ப, பனங்கனி போல் உதிரச் செய்தன இராமனது சூரியனை ஒத்த சுடு சரங்கள்.

அம் மணி முடி ஒருபதும் செருக்களத்தே புரளக் கண்ட அரக்கர்கள் அஞ்சி, 'கூற்றம் மானிடமாய் வந்து தோன்றியது; இரக்கம் இன்றி எங்கோன் செய்த தீமை எமக்கு எய்திற்று' என்று சொல்லி, 'குரக்கு-நாயகர்காள்! இளங்கோவே! கோல வல் வில் இராம பிரானே! நம்பி அநுமா! சுக்கிரீவா! அங்கதனே! நளனே!' என்று கூவி, 'எம்மைக் கொல்ல வேண்டாம்' என்று முறையிட்டுக் கொண்டனர். 'நீலன் வாழ்க, சுடேணன் வாழ்க, அங்கதன் வாழ்க, அனுமன் வாழ்க' என்று வாழ்த்தி, இராமனது பெரு வெற்றி பேசி, கூத்தாடி, உயிர் தப்பினர்.

**21. துயர் தீர்த்தல் :** ஏழையை, இலங்கைக்கு இறையை, வாழத் தெரியா மதிஇலியை, புன்மையாளனை, வென்ற வென்றியாளன், திண் தோள் மா மணி வண்ணன், வேரி வார் பொழில் மா மயிலை, சீதை என்பதோர் தெய்வத்தை, சிறை விடுவித்து, வானவர் ஆகுலம் தீர்த்தருளினன்.

**22. விபீடணனுக்கு முடி சூட்டுதல்:** இராவணன் தம்பி நல்லான், விபீடணற்கு, ' என் நாமம் இலங்கும் அளவும் நீயே இலங்கை ஆள்வாய் ' என்று அரசு அளித்தான்.

**23. உடன் உண்ணல் :** அனுமனை மர்க்கடம், விலங்கு, என்று கருதாது, காதல்-ஆதரம் கடலினும் பெருக, ' நீ செய் தகவினுக்குக் கைம்மாறு இல்லை ; உன்னோடு உடன் உண்பன் நான் !' என்று, மாருதியுடன் அமர்ந்து உண்டான்.

**24. அயோத்தியில் அரசு புரிதல் :** திருமகளோடு அம் பொன் நெடு மணி மாட அயோத்தி எய்திய எம்பெருமான், உலகு உய்ய, அரசு எய்தினன்.

அகத்தியன் வாய் மொழியால், தான் முன் கொன்ற அரக்கர் கோனின் பழம் பெருங் கதை கேட்டான். மிதிலைச் செல்வியின் திரு வயிறு வாய்த்த மக்கள் வாயிலாக, தன் சரிதையைக் கேட்டருளினன்.

செறி தவச் சம்புகனைச் சென்று கொன்று, செழு மறையோன் உயிர் மீட்டான். இலவணன் என்பவனைத் தம்பியால் வான் ஏற்றுவித்தான். முனிவன் வேண்ட, இலக்குமணனைப் பிரிந்தான்.

**25. சோதி புகுதல் :** புல், எறும்பு, தொடக்கமான சரா-சரங்களை எல்லாம் வைகுந்தத்து ஏற்றி, தானும் மணி நெடுந் தோள் நான்கும் இலங்க, விண் முழுதும் எதிர்வர, தன் சோதி புகுந்து, அமரர் அரிவுருக, இனிது வீற்றிருந்தான்.

' எங்கள் கோமான் !' என்று தொண்டர்கள், இன்னமுதும் மதியாது எம்பெருமான் சரிதையைச் செவியாலும் கண்ணாலும் பருகி இன்புறுவர்.

### பலராமாவதாரம்

இராமனாகத் தோன்றிய பின், கண்ணனாகத் தோன்றுவதற்கு முன், கரு மா முகில் வண்ணன் கண்ணனுக்கு மூத்தோனாக, வெண் சங்கின் வண்ணமான மா மேனியுடன் தோன்றினன். ஒற்றைக் குழையும் நாஞ்சிலும் தரித்தான்.

இவனும் கண்ணன்போல், ஆயர்பாடியில் வளர்ந்தான். ஆனல், கண்ணன்போல் களவு முதலியன செய்தறியான் என்பர் ஆய்ச்சியர்.

## ஸ்ரீ கிருஷ்ணவதாரம்

**1. கண்ணன் பிறப்பு :** திரு மடந்தை, மண் மடந்தை, இரு பாலும் திகழ, சுடர் ஆழி வெண் சங்கு இருபால் பொலிந்து தோன்ற, ஏழ் உலகும் தனிக் கோல் செல்ல, தன்னுடைச் சோதியில் வீற்றிருந்த பரம்பொருளை விண்ணோர்கள் நல் நீராட்டி, சூட்டு நன் மாலைகள் தூயன ஏந்தி, தூபம் தரா நிற்கவே, அவன் அங்கு ஒரு மாயையினால், நிலமங்கை துயர் தீர, மண் உலகில் மனிசர் உய்ய, கண்ணன் அவதரித்தருளினான். சாது சனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதி அம் சோதி உருவை அங்கு வைத்து, இங்குப் பிறந்தான்.

மல்லை மூதூர் வட மதுரையில், 'என்ன நோன்பு நோற்றாள்-கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள் ?' என்னும் வார்த்தை எய்துவிக்க, 'மத்தக் களிற்று வசுதேவர் தம்முடைச் சித்தம் பிரியாத தேவகி-தன் வயிற்றில்', மக்கள் அறுவரைக் கல்லிடை மோத இழந்த அத் தாயைக் குடல் விளக்கம் செய்ய, தந்தை காலில் பெரு விலங்கு தாள் அவிழ, கண்ணன் பிறந்தான். கஞ்சன் வலை வைத்த அன்று, கார் இருளில், சிறையில், அத்தத்தின் பத்தாம் நாள் (திருவோணம்) நிகழ்ந்தது இப் பிறப்பு.

**2. ஆய்ப்பாடி அடைதல் :** ஓர் இரவில் ஒருத்தி மகனாய்ப் பிறந்தவன், அதே இரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளரலுற்றான். தேவகி சிங்கம் தெய்வ-நங்கை யசோதைக்குப் பேதைக் குழவியாய், அறம் செய்யும் நந்தகோபன்-தன் இன் உயிர்ச் சிறுவனாய், பல தேவற்கு ஓர் கீழ்க் கன்றாய், ஆயர் பாடிக்கு அணி விளக்காய், ஆயர்கள் நாயகனாய், கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தாய், திகழ்ந்தான்.

பெற்ற அன்னை புலம்ப, வளர்த்த அன்னை தொல்லை இன்பத்து இறுதி கண்டாள்.

**3. மங்களம் கொண்டாடுதல் :** பாடுவாரும், ஆடுவாரும், ஓடுவாரும், விழுவாரும், 'நம்பிரான் எங்கு உற்றான் ?' என்று நாடுவாரும் ஆயிற்று ஆய்ப்பாடி.

எண்ணெய், சுண்ணம், எதிரெதிர் தூவுவார் ; நறு நெய், பால், தயிர், நன்றாகத் தூவுவார் ; உறியை முற்றத்து உருட்டி நின்று, ஆடுவார்—அறிவழிந்து, ஆனந்தம் ஆயிற்று ஆய்ப்பாடி.

'ஆண் ஒப்பார் இவன் நேர் இல்லை' என்பார் ; 'ஓணத்தான் உலகு ஆளும்' என்பார்.

**4. பிள்ளை வாயுள் வையம் கண்டது :** குழந்தைக் கண்ணனைக் கையும் காலும் நிமிர்த்தி, பைய நீராட்டினாள் யசோதை. அப்பொழுது, பசுஞ் சிறு மஞ்சளால் நாக்கு வழிக்க, குழந்தை திறந்த வாய்க்குள் உலகம் ஏழும் கண்டாள் ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை.

இந்த நிகழ்ச்சியை மறக்க முடியவில்லை. காது குத்தும்போது, ‘குழந்தாய் ! நீ விண்ணெல்லாம் கேட்க அழுதிட்டாய் ; அந்த உன் வாயில் மண்ணெல்லாம் கண்டேன் ; அஞ்சினேன்’ என்றாள்.

**5. சீராட்டி வளர்த்தல் :** பத்து நாளும் கடந்த இரண்டாம் நாள், ஆயர்கள் சய மரம் கோடித்து, குழந்தையைப் பிரசவ அறையில் நின்று வெளிக் கொணரும் சடங்காகிய உத்தானம் கொண்டாடி, உகந்தனர்.

தூளித் தொட்டிலில் யசோதை குழந்தையைக் கிடத்துவாள் ; எடுத்துக் கொள்வாள் ; அணைத்துக் கொள்வாள் ; தன் தோழியை நோக்கி,

> கிடக்கில், தொட்டில் கிழிய உதைத்திடும் ;
> எடுத்துக் கொள்ளில், மருங்கை இறுத்திடும் ;
> ஒடுக்கிப் புல்கில், உதரத்தே பாய்ந்திடும் ;
> மிடுக்கிலாமையால், நான் மெலிந்தேன், நங்காய் !

என்று கூறுவாள்.

மற்ற ஆய்ச்சியர்களுக்கு, பாதாதி-கேசமாகக் குழந்தையின் அழகைக் காட்டுவாள். தாலாட்டுவாள் ; பாலூட்டுவாள் ; அம்புலி காட்டுவாள்.

**6. பூதனை வதம் :** தீ மனத்தான் கஞ்சனது வஞ்சனையால், தாயும் பிறரும் அறியாத நள் இருளில், புள் உரு ஆகி வந்த பொல்லா வடிவுடைப் பேய்ச்சி பூதனை, பெற்ற தாய்போல் வந்து, குழந்தைக் கண்ணனை எடுத்து, ஒக்கலில் வைத்து, ‘பால் உண்’ என்று நச்சு முலை உண்ணக் கொடுத்தாள். குழந்தையும் முலை உண்பான் போலே, முனிந்து, உயிர் உண்டான். பேய்மகள் அலறி, மண் சேர்ந்தாள்.

**7. சகடம் உதைத்தல் :** யசோதை யமுனை நீராடப் போன பொழுது, ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறு தொட்டிலில் உறங்குவான்போலே கிடந்த பிள்ளை, மலைபோல் உருண்டு வந்த சகடத்தைத் தாள் நிமிர்த்து உதைக்க, அச் சகடம் தளர்ந்து முறிந்தது. கஞ்சன் அனுப்பிய கள்ளச் சகடாசுரன் உடல் பிளந்து, மடிந்தான்.

இது, 'நாலைந்து திங்கள் அளவிலே' நிகழ்ந்தது என்று பெரியாழ்வாரும், 'நம்பி பிறந்த எழு திங்களில்' என்று திருமங்கை மன்னனும் கூறுவர்.

**8. குழந்தையின் லீலைகள் :** தன் முகத்துச் சுட்டி தூங்கத் தூங்க, தவழ்ந்து போய், பொன் முகக் கிண்கிணி ஆர்ப்ப, புழுதி அளைவான்.

கோல நறும் பவளச் செந் துவர் வாயினிடைக் கோமள வெள்ளி முளைபோல் சில பல் இலக, கண-கண சிரிப்பான் ; முன் வந்து முத்தம் தருவான் ; முத்து அனைய முறுவல் செய்வான்.

அழகிய வாயில் அமுத ஊறல் தெளிவுற, மழலை முற்றாத இளஞ் சொல்லால், 'அம்புலீ! சந்திரா ! மாமதீ ! விரைந்து ஓடி வா' என்று அழைப்பான். தாயின் முதுகைக் கட்டிக் கொள்வான். கிண்கிணிகள் ஒலிப்ப ஓடுவான் ; ஓடிஓடிப் போய்விடுவான்.

பாடிப் பாடி வருவான் ; அசைந்து அசைந்து கூத்தாடுவான். பூங் குழலார்கள் எண்ணத்துள் என்றும் தித்திக்க இருந்து, லீலைகள் பல புரிவான்.

**9. வெண்ணெய் உண்டது :** கண்ணன் மெள்ள நடந்தும், துள்ளி விளையாடிச் சென்றும், ஆய்ச்சியர் மனைகள் தோறும் திரிந்து, தித்தித்த பாலும், தடாவினில் வெள்ளி மலை இருந்தால் ஒத்த வெண்ணெயும், மெத்தத் திரு வயிறு ஆர, விழுங்குவான்.

தோய்த்த தயிரும், நறு நெய்யும், உளம் குளிர, அமுது செய் வான். எட்டாத உறிகளில் உள்ள வெண்ணெய், பால், முதலிய வற்றை எட்டி எடுக்க, பொத்த உரலைக் கவிழ்த்து, அதன்மேல் ஏறு வான். ஒத்த தோழர்களுக்கும் வாரி வழங்குவான்.

'வைகலும் வெண்ணெய் கைகலந்து உண்டான்' என்று ஆய்ச் சியர் பேசினர், ஏசினர், நகைத்தனர்.

'வெண்ணெயே அன்று, இருந்த பாலும் பதின் குடம் கண்டி லேன், நந்தன் மகன் அல்லால் மற்று வந்தார் ஆரும் இல்லை' என்று ஆய்ச்சி ஒருத்தி யசோதையை அணுகி முறையிட்டாள்.

ஆய்ச்சியர் அழைப்ப, கண்ணன் வெண்ணெய் உண்டதும் உண்டு. ஒளித்தும், நாணாது, வெண்ணெய் உண்பான். உறி ஆர்ந்த நறு வெண்ணெய் ஒளியால் சென்று, அங்கு உண்பான். மிடறு மெழுமெழுத்தோட, வெண்ணெய் விழுங்குவான். வெறுங் கலத்தை உடைய விட்டு, ஓசை கேட்பான்.

அருகு இருந்த மோர்க் குடம் உருட்டி, ஓர் ஆய்ச்சி கண்டு கொண்டதும், ஓராதவன்போல், முன் இருந்த இடத்திலே கிடந்தான்.

வேல் கண் மடவாள் போந்தனையும் பொய் உறக்கம் உறங்கி, பிறகு அறிவுற்று, தோள் அளவும் கைந் நீட்டி, முழுதும் வெண்ணெய் அளைந்து உண்பான்.

வெண் தயிர் தோய்ந்த செவ்வாய் கண்டு, தாய் எடுத்த சிறு கோலுக்கு உளைந்து ஓடி, தயிர் உண்ட வாய் துடைத்தான்.

எழில் கொள் தாம்பு கொண்டு தாய் அடிப்பது போல் நிற்க, கண்ணன் அஞ்சி நோக்கினான்; தொழுதான்; அணிகொள் செஞ் சிறு வாய் நெளித்து அழுதான். இது கண்ட யசோதை தொல்லை இன்பத்து இறுதி கண்டாள்.

**10. உரலில் கட்டுண்ணல்:** விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு, ஆய்ச்சி (யசோதை) அன்புற்று நோக்கி, தன் மோதிரக் கையால் கையைப் பிடித்து, ஊரார் எல்லாரும் காண, கண்ணி நுண் சிறுத் தாம்பினால், 'நீர் ஆம் இது செய்தீர்!' என்று உரலோடு கட்டினாள்.

மொத்துண்டு, அப் பெரு மா உரலில் பிணிப்புண்டிருந்து, குரல் ஓவாது, விம்மி விம்மி, ஏங்கி, அழுதான் கண்ணன்.

உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய அவ் எளிய வடிவு, உதரத்திலே கட்டப் பெற்றதால் தழும்பிருந்த தாமோதரன் ஆயிற்று.

**11. மருதம் முறித்தது:** மைத்த கருங் குஞ்சி மைந்தன், ஆய்ச்சி உரலோடும் ஆர்க்கப் போய், ஓடி, ஒருங்கு ஒத்த இணை மருதூடு நடந்து, அம் மரம் இரண்டும் சாய்த்து, பொய்ம் மாய மருதான அசுரரை, எண் திசையோரும் வணங்க, மாய்த்தருளினான்.

**12. இளமை விளையாட்டு:** ஆற்றில் சிறுமிகள் விளையாடிக் கொண்டிருக்க, அவர்களைச் சேற்றால் எறிந்து, வளையும் துகிலும் கைக்கொண்டு, காற்றினும் கடியனாய் ஓடி, அகம் புகுந்தான். அது குறித்து அவர்கள் கேட்க, மாற்றமும் தாரான்.

பூங்குழலார் துகில் கைக்கொண்டு, மரத்தில் ஏறுவான்: வேண்டவும் தாரான்.

மாளிகை மச்சில் ஏறி, மாதர்கள் இடம் புகுந்து, கச்சொடு, பட்டைக் கிழித்து, துகிலவை கீறினான்.

கன்றுகள் ஓட, செவியில் கட்டெறும்பு பிடித்து இடுவான். கன்றின் வாலில் ஓலை கட்டி விடுவான். எண்ணெய்க் குடத்தை உருட்டுவான்; இளம் பிள்ளையைக் கிள்ளி எழுப்பி, கண்ணைப் புரட்டி விழிப்பான்.

சிறுமியர் முற்றும் முதுகு நோவ இருந்து, சிறு சுளகுகொண்டு வண்டல் நுண் மணலும், வெள்ளை நுண் மணலும் தெள்ளி, வளைக்

கைகளால் விசித்திரப் பட வீதிவாய் இழைத்த சிற்றில்களை, இரக்கம் இன்றி, சிதைப்பான். புன்முறுவல் செய்து, சிற்றிலோடு சிந்தையும் சிதைப்பான்.

பாலைக் கறந்து, அடுப்பேற வைத்து, மகள் இருப்ப, ஆய்ச்சி ஒருத்தி மேலையகத்தே நெருப்பு வேண்டிச் சென்று, இறைப் பொழுது அங்கே பேசிநின்றாள். அச் சமயம் பார்த்து, கண்ணன் அப் பாலைச் சாய்த்துப் பருகினான்.

திருவோண விழாவில் செந்நெல் அரிசி, சிறுபருப்பு, அக்காரம் (சர்க்கரை), நறுநெய், பாலால் அட்ட அடிசிலை எல்லாம் விழுங்கி, 'இன்னம் உகப்பன் நான்!' என்றான். கன்னல் இலட்டுவத்தோடு, சீடை, எள்ளுண்டை, கலத்தில் இட்டுத் தன் அகம் என்று வைத்துப் போக, இவன் புகுந்து, அவற்றை உண்டு, இன்னும் அங்கு உறியை நோக்கி, வெண்ணெயும் சோதித்தான்.

ஓர் இல்லம் புகுந்து, சிறுமியைக் கூவி, கை-வளை கழற்றி, கொல்லையில் நின்றும் நல்ல நாவற் பழங்கள் கொணர்ந்து விற்ற ஒருத்திக்கு அவ் வளை கொடுத்து, பழங்கள் கொண்டு, 'நான் அல்லேன்' என்று சிரித்தான்.

**13. ஆநிரை மேய்த்தல் :** வேலிக்கோல் வெட்டி, விளையாடு வில் ஏற்றி, பீலித் தழை பிணைத்து, குடையும் செருப்பும் இலாதே, ஆநிரை மேய்க்கப் போய், கரிய திருமேனி வாடக் கானகம் எல்லாம் அலைந்து திரிந்தான்.

மாதர் வந்து, அலர் தூற்றி, மனைகள் தோறும் தீமைசெய்து திரியாமே, அன்னை கண்ணனைக் கன்றின்பின் போக்கிய பின், மனம் கரைந்து 'பொன்அடி நோவ, என் இளஞ் சிங்கத்தைக் கானில் போக்கினேன், எல்லே பாவமே!' என்று இரங்கினாள்.

'சிற்றாடையும் சிறு பத்திரமும் (கத்தியும்) கட்டிலின் மேல் வைத்து, செங்கமல அடிகள் வெதும்ப, கஞ்சன் மனத்துக்கு உகப்பனவே செய்தாய்!' என்று புலம்பினாள்.

காலிக்குப் பின்னே கண்ணன் வருகின்ற கோலம் கண்டு, ஆய்ச்சி, 'கண்ணா! உன் கண்கள் சிவந்தாய்; என்னின் மனம் வலியாள் ஒரு பெண் இல்லை: நாளைத் தொட்டுக் கன்றின்பின் போகேல்' என்றாள்.

கண்ணன் வழக்கம்போல் கறவைகள் பின் சென்று, கானம் சேர்ந்து, இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டினான். கணங்களோடு மின்மேகம் கலந்தால்போல, வனமாலை மினுங்க நின்று, விளையாடுவான். அக் காலங்களில் வேர்த்து, பசித்து, வயிறு அசைந்து, வேண்டும் அடிசில் உண்பான்.

சிந்துரப் பொடி கொண்டு சென்னி அப்பி, திருநாமம் இட்டு, முல்லை நல் நறு மலர், வேங்கை மலர் அணிந்து, சுரிகையும் வில்லும் செண்டுகோலும் மேலாடையும் தோழன்மார் கொண்டு ஓட, ஒரு கையால் ஒருவன் தோளை ஊன்றி, ஒரு கையால் வளைகோல் வீசி, பல்லாயர் குழாம் நடுவே எல்லியம்போதில் காலிப் பின் வரும் கண்ணனைக் கண்டு, கன்னியர் காமுறுவாராயினர்.

குழல்களும் கீதமும் ஆகி எங்கும், கோவிந்தன் வருகின்ற கூட்டம் கண்டு, ‘ மழைகொலோ வருகின்றது ’ என்று சொல்லி, மங்கைமார் சாலக வாசல் பற்றி, நுழைவனர் நிற்பனராகி, உள்ளம் விட்டு ஊண் மறந்தனர்.

**14. குழலிசை பாடியது :** குழல் இருண்டு சுருண்டு ஏறிய குஞ்சிக் கோவிந்தன் தன் கோமள வாயில் குழலை வைத்துக் கொண்டு,ஊதுவான். இடக் கன்னத்தை இடத் தோளொடு சாய்த்து, இரு கை கூட, புருவம் நெரிந்து ஏற, குட வயிறு பட, வாய் கடை கூட, குழல் ஊதுவான்.

அந்தத் தூய வாயில் குழலோசை கேட்டு, கோவலர் சிறுமியர் குதுகலிப்ப காவலும் கடந்து, கயிறு மாலை ஆகி வந்து, சூழ்ந்து கொண்டனர். மடமயில்களொடு மான்பிணைபோலே அம் மங்கைமார்கள் மலர்க் கூந்தல் அவிழ, உடை நெகிழ, ஓர் கையால் பற்றி, ஒல்கி, ஓடு அரிக்கண் ஓட, நின்றனர்.

வானிளம்படியர் வந்து வந்து ஈண்டி, மனம் உருகி, மலர்க் கண்கள் பனிப்ப, சென்னி சேர்த்து நின்றனர். மேனகையொடு, திலோத்தமை, அரம்பை, ஊர்வசி முதலோர் ஆடல் பாடல் மறந்து, வாய்திறப்பு இன்றி, வெள்கி மயங்கினர். தும்புருவோடு, நாரதனும், வீணை மறந்தனர். கின்னர-மிதுனங்களும் தம்தம் ‘கின்னரம் தொடுகிலோம்’ என்றனர். அம்பரம் திரியும் கந்தர்வர் எல்லாம் அமுத கீத வலையால் சுருக்குண்டு, ‘நம்பரம் அன்று’ என்று நாணி, மயங்கி, நைந்து, சோர்ந்து, கைம் மறித்து நின்றனர். குழலிசை அமரலோகத்து அளவும் சென்று இசைப்ப, வானவர் எல்லாம் அவி-உணு மறந்து, ஆயர்பாடி நிறையப் புகுந்து, ஈண்டி, செவி-உணுவின் சுவைகொண்டு, மகிழ்ந்து, கோவிந்தனை என்றும் விடாது தொடர்ந்தனர்.

சிறு விரல்கள் தடவிப் பரிமாற, குறு வெயர்ப் புருவம் குடிலிப்ப, குழல்கொடு ஊதினபோது; பறவைக் கணங்கள் கூடு துறந்து, வந்து, சூழ்ந்து, படுகாடு கிடப்ப ; கறவைக் கணங்கள் கால் பரப்பி, கவிழ்ந்து, இரங்கி, செவி ஆட்டாது, நின்றன. மான் கணங்கள் மருண்டு, மேய்கை மறந்து, மேய்ந்த புல்லும் கடைவாய் வழி சோர,

புடைபெயராது, எழுது சித்திரங்கள் போல,நின்றன. மரங்கள் மதுத் தாரைகள் பாய, நின்றன ; மலர்கள் வீழ்ந்தன ; வளர் கொம்புகள் தாழ்ந்தன, இரங்கின, கூம்பின—திருமால் நின்ற நின்ற பக்கம் நோக்கி.

**15. கூத்து ஆடியது :** மணல்-குன்று ஏறி, மூத்த அவை காண, உவந்து, கூத்து ஆடினான். குடங்கள் தலைமீது எடுத்துக் கொண்டு, சுழன்று ஆடினான். குடங்களை எடுத்து, ஏறவிட்டு, கூத்தாடினான். தெருவிலே குடம் இரண்டு ஏந்தி, 'ஆர், ஆர்?' எனச் சொல்லி, பறை கறங்க, பாரோர் மகிழ, ஆடினான். மரக் கால் கூத்தும் ஆடினான்.

நுண் இடை ஆய்ச்சியர்-தம்மொடும் கோத்து, அசைந்து, குரவைக் கூத்து ஆடினான்.

தாய்மார் மோர் விற்கப் போக, தகப்பன்மார் கறவைப் பசுக்கள் மேய்க்கப் போக, ஆயர் குலக் கொழுந்து பெண்டிர்க்கு அணுக்கனாய்த் திரிந்தான்.

மகளிர் பங்கயநீர் குடைந்தாட, பின்னே சென்று, ஒளித்திருந்து, பூந் துகில் வாரிக்கொண்டு மரம் ஏற, அவர்கள் இரப்ப, 'மங்கைநல்லீர், வந்து கொள்மின்' என்றான். பிறகு, பூங் குருந்தம் ஒசித்து, ஆடைகளை அளித்தான்.

**16. அசுரர்களை அழித்தல் :** கன்றின் உரு ஆகி, மேய்ப் புலத்தே வந்த கள்ள அசுரனைச் சென்று பிடித்து, சிறு கைகளாலே விளங்காய் எறிந்து,அந்த அசுரனையும் மாய்த்தான். தேனுகன் ஆவி போக, அங்கு ஓர் பனங்கனி உதிர, எறிந்தான். பிலம்பனை, புள் உருவாய் வந்த பகனை, கேசியை, மற்றும் பல அசுரர்களை, அழித்தான்.

**17. காளிய நடனம் :** நஞ்சு உமிழ் நாகம் கிடந்த நல்-பொய்கை புகுந்து, கலக்கி, அடங்கா விடம் காலும் அரவத்தை, வால் பற்றி ஈர்த்து, படம் படு ஐந் தலைமேல் பாய்ந்து ஏறி, பல் மணி சிந்த, தூய சுந்தர நடனம் பயின்று அருளினான்.

**18. நப்பின்னை திருமணம் :** நல் தோகை மயில் அனைய ஆயர் இளங் கொடி நப்பின்னை காதலால், எழு எருதுகளைக் கொம்பு ஒடிய, வலி அழித்து, மணம் புரிந்தான்.

**19. கல்லாலே கல்மாரி காத்தது :** வானவர் கோன் இந்திரனுக்கு என்று ஆயர் எடுத்த விழாவில், மலைபோல் அமைத்த சோற்றுப் படையலை, கறியொடும் தயிரொடும் நெய்யொடும் கலந்து, கண்

ணன், முற்ற வாரி வளைத்து, உண்டான். அமரர்பதி மிக வெகுண்டு, காள மேகங்களால் ஏழு நாள் கல்மாரி பெய்விக்க, ஆய்ச்சியரும், ஆயரும், ஆநிரையும், அலறி, சரண் புக, மணி நெடுந் தோள் காம்பாகக் கொடுத்து, தடங்கை விரல் ஐந்தும் மலரவைத்து, 'கல் எடுத்துக் கல் மாரி காத்தாய் !' என்று உலகெலாம் போற்ற, கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடை பிடித்தான்.

**20. கஞ்சன் வதம் :** சாது சனத்தை நலியும் வஞ்சக் கஞ்சனுக்கு நஞ்சு ஆகி, நெஞ்சிலே நெருப்பு என்ன நின்ற கண்ணன், அவன் கருத்தைப் பிழைப்பிக்கும் நோக்குடன், வட மதுரையில் நடத்திய வில் விழாவுக்குச் சென்றான். அங்கே கூனி ஒருத்தி சந்தனம் கொண்டுபோக, 'அதை நமக்குக் கொஞ்சம் நல்குவாய்' என்று கண்ணன் கேட்க, அவளும் திருமேனியில் பூச, அவள் கூனை உள்ளே ஒடுங்க, நிமிர்த்தி அருளினான்.

புகு வாசலில் நின்றது கஞ்சன் விட்ட வெஞ்சினக் கொலை வேழம். அது கலங்க, மருப்பினைப் பறித்து, அதை, சாடிக் கொன்று, பாகனையும் வீழ்த்தினான் கண்ணன்.

இரு மலைபோல் எதிர்ந்துவந்த இரு மல்லரையும் மல்-போரில் மாய்த்து, 'மல்அமருள் மல்லர் மாள, மல் அடர்த்த மல்லா !' எனப் போற்ற நின்றான்.

அப்பால், நெஞ்சில் கறை கொண்ட கொடுமைக் கஞ்சனை உதைத்துக் கொன்று, தன் தாதை காலில் அவன் கோத்த தளைகோள் விடுத்தான்.

**21. குரு தட்சிணை :** மாதவத்தோன் (சாந்தீபினி புத்திரன்) மறி கடல்வாய் மாண்டான். ஓதுவித்த தக்கணையாக, அவனை உருவோடு அப்படியே கொடுத்தான்.

**22. ருக்மிணி பரிணயம் :** கண்ணாலம் கோடித்து, கன்னி-தன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசு அழித்து, ஆங்கு அவளைக் கைப்பிடித்து, உருப்பிணி நங்கையை வலியத் தேரேற்றிக்கொண்டு, விருப்புற்று வரும்போது, அவளை மீட்பான், விரைந்து செருக்குற்று எதிர்வந்தவன் வீரம் சிதைத்து, மானபங்கம் செய்து, தேவியை மணம் புரிந்தான்.

கேட்பார் செவி சுடும் கீழ்மை வசைவுகளே வையும் பழம் பகைவன் சிசுபாலனை வதைத்து, தன் திருவடி அடையச் செய்தான்.

**23. கற்பகம் கொணர்தல்:** கற்பகக் காவு கருதிய காதலிக்காக, 'இப்பொழுது ஈவன்' என்று, இமையவர்கோனைச் செற்று, காவளம் கடிது இறுத்து, கற்பகம் கொண்டு, துவாரகையில் நட்டான்.

**24. சீமாலிகன் முதலானோர் வதம் :** சீமாலிகனோடு தோழமை கொண்டிருந்தும், அவன் உள்ளம் கண்டு, அவனைச் சாகுமாறு, சக்கரத்தால் தலை கொண்டான்.

காய் சினத்த காசி மன்னன், வக்கரன், பௌண்டிரன், நரகன் முரன், முதலானோரை வதம் செய்தான்.

**25. வாணன் தோள் துணித்தல் :** ஈசன், தன் படையோடும் கிளையோடும், ஓட, வாணனை ஆயிரம் தோள் துணித்தான்.

**26. பாரதக் கதைகள் :** காண்டவ-வனம் என்பதோர் காடு அமரர் அரசனுக்கு உரியது. சோலை நிறைந்த அவ் வனத்தை அழல் உண்ண முனிந்தான்.

அந்தகன் சிறுவன், அரசர்-தம் அரசற்கு இளையவன் (துச்சாதனன்) அணியிழையை (பாஞ்சாலியை) அணுகி, 'எம்-தமக்கு உரிமை செய்' என, அவள் தரியாது, 'எம்பெருமான், அருள்!' என்ன, அருள் செய்தான்.

ஒன்றே உரைப்பான், ஒரு சொல்லே சொல்லுவான், துன்று முடியான், துரியோதனன் பக்கல் தூது சென்றான். ஐவர்க்கு ஆய் மண் அகலம் கூறு இடுவான், மன்னவனால் சொல்லுண்டான். அரவு நீள் கொடியோன் அவையுள் ஆசனத்தை அஞ்சிடாதே இட, பெரிய மா மேனி அண்டம் ஊடுருவ, பெருந் திசை அடங்கிட, நிமிர்ந்தான். ஊர் ஒன்று பெறாத உரோடத்தால், பார் ஒன்றிப் பாரதப் போர் மூட்டினான். 'நம்பி, சரண்' என்று தாழ்ந்த தனஞ்சயனுக்காக மணித் திண் தேர் ஊர்ந்தான்.

பற்றார் நடுங்க, பாஞ்சசன்னியத்தை வாய் வைத்து ஊதினான்.

பார்த்தனும், வைதிகனும், உடன் ஏற, திண் தேர் கடவி, சுடர் ஒளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் பிள்ளைகளை உடலொடும் கொண்டு கொடுத்தான். மண்மிசைப் பெரும் பாரம் நீங்க, பாரத மாப் பெரும் போர் முடித்தான்.

உத்தரையின் சிறுவனும் மருமகன் சந்ததியுமான அவன் (பரிட்சித்து) உயிர் மீட்டு, மைத்துனன்மார் உருமகத்தே வீழாமே, குருமுகமாய்க் காத்தான்.

மைத்துனன்மார் காதலி கூந்தல் முடிப்பித்து, அவர்களையே மன்னர் ஆக்கினான்.

## கற்கி அவதாரம்

தவ் நெறிக்கு ஓர் பெரு நெறி ஆய், வையம் காக்கும் கடும் பரி மேல் கற்கியும் ஆனான்.

## 2. பிற கதைகள்

மஞ்சு ஆடும் மலை ஏழும், கடல்கள் ஏழும் திசைகள் எட்டும், வானகமும், மண்ணகமும், மற்றும் எல்லாம், எஞ்சாமல் வயிற்று அடக்கி, அன்னவசமாகி, ஊழி வெள்ளத்து, ஓர் ஆலின் இளந் தளிர் மேல் பாலகனாய், பரம்பரன், பைய யோகு துயில் கொண்டவன், பெரு வெள்ளம் உண்ணாமல், தான் விழுங்கி, உய்யக்கொண்ட மண்நாடும், விண்நாடும், வானவரும், தானவரும், மற்றும் எல்லாம், ஒழியாமே உமிழ்ந்த பெருவாயன் ஆனான்.

உளைந்திட்டு எழுந்த மது-கைடவர்கள் வலியால் வயிரம் விளைந்திட்டது என்று விண்ணோர் பரவ, பெருமான் அவர் நாள் ஒழிக்க, அவர்கள் வயிறு உருகி மாய்ந்தார்.

ஈசனைப் பயந்த நான்முகனை, தன் உந்தி மா மலர் மிசைப் படைத்து, 'நீ உலகெலாம் படை' என்று பணித்தான்.

கலைகளும், வேதமும், நீதிநூலும், கற்பமும், சொற்பொருள் தானும், மற்றை நிலைகளும், வானவர்க்கும், பிறர்க்கும், நீர்மையினால் அருள்செய்தான்.

பேரிருள் சூழ்ந்து உலகை மூட, நான்மறை முற்றும் மறைந்திட, அன்னம் ஆகியும், பரிமுகம் ஆகியும், அருமறை தந்தான்.

அழல் உமிழ் ஆழிகொண்டு எறிந்து, அங்கு எதிர்முக அசுரர் வன்குலம் வேர் அறுத்தான். மாசினத்த மாலி, சுமாலி, காலநேமி, காலனோடு கூடுமாறு வில் குனித்தான்.

நீறு பூசி, ஏறு ஊரும், இறையோன் சென்று குறை இரப்ப, தன் மார்வு அகலத்துக் குருதி-நீர் அளித்து, உகந்து, அவன் சாபம்-அது நீக்கினான்.

நான்முகன் தன் வாழ்நாள் மிகுதி பற்றி மேற்கொண்டிருந்த தருக்கை, வேத வாய்மொழி உரோமச முனிவனால் போக்கினான். பனி சேர் விசும்பில் பால் மதியின் தேம்புகின்ற இடரைத் தீர்த்து, சிறை விடுத்தான்.

கத்திரபந்துவும் (க்ஷத்திரபந்து) மொய்த்த வல்வினையுள் நின்று மூன்று எழுத்து உடையபேரால் (கோவிந்த நாமத்தால்) பராங்கதி கண்டுகொண்டான்.

நமனும், முற்கலனும் (நாரணன் நாமங்கள்) பேச, நரகில் நின்றார்கள் கேட்க, நரகமே சொர்க்கம் ஆயிற்று.

மீன் அமர் பொய்கையில், நாள்மலர் கொய்வான் வேட்கையினோடு சென்று, இழிந்த வேழத்தின் கால் முதலை வாய்ப்பட, அது துதிக்கை கூப்பி 'என் கண்ணா, கண்ணா!' என்று கதற, புள் ஊர்ந்து

சென்று, நின்று ஆழி தொட்டு, மா முதலை துணிபட, ஆனையின் துயரம் தீர்த்தான்.

நர-நாரணன் ஆய், உலகத்தில் அறநூல் சிங்காமை விரித்தான்.

சிவபிரானை ஒரு கூறுக உடைய திருமால், அப் பெருமான், திரிபுரம் எரிக்க, அழல்-அம்பாய் உதவினான். மார்க்கண்டேயனைச் சிவபிரான் உய்வித்ததும், ஆலமர நிழலில் நால்வருக்கு அறம் உரைத்ததும், அத் திருமாலின் அருளே.

புரிசடை அம் புண்ணியனும், உலகம் தாவிய நெடுமாலும், இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து, 'ஒருவன் ஒருவன் அங்கத்து என்றும் உளன்' என்னுமாறு காட்சி தருவர்.

## 3. சரித்திரக் குறிப்புக்கள்

**1. அபிமான துங்கன் :** கோவிந்தன் குணம் பாடுவோர் கூடியுள்ள திருக்கோட்டியூரின் தலைவனான அபிமான துங்கன், நளிர்ந்த சீலன்; நயாசலன்; தெளிந்த செல்வன்; செங்கண் மால் சேவகன் (11, 367).

**2. நெடுமாறன் :** குறுகாத மன்னரைக் கூடுகலக்கி, வெங்கானிடைச் சிறுகால் நெறியே போக்குவிக்கும் திருமாலிருஞ்சோலைச் செல்வனை, தென்னன், தென் கூடற்கோன், கொல் நவில் கூர்வேல் நெடுமாறன், கொண்டாடினான் (344, 345).

**3. பாண்டியர் குலபதி :** பருப்பதத்து (இமயமலையில்), கயல் பொறித்தான் பாண்டியர் குலபதி (469).

**4 தில்லை மூவாயிரவர் :** 'செழுந் தண் சோலைத் தில்லை நகர்த் திருச்சித்திரகூடம்-தன்னுள், அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் ஏத்த, அணி மணி ஆசனத்து இருந்த அம்மான்' (742) என்பர் குலசேகரர். 'மூவாயிரம் நான்மறையாளர் நாளும் முறையால் வணங்க, அணங்கு ஆய சோதித் தேவாதி-தேவன் திகழ்கின்ற தில்லைத் திருச்சித்திர கூடம்' (1165) என்பது திருமங்கை மன்னன் வாக்கு.

**5. தொண்டையர்கோன் :** மயிலைத் திருவல்லிக்கேணியில், மன்னு தண் பொழிலும், வாவியும், மதிளும், மாட மாளிகையும், மண்டபமும், தென்னன் தொண்டையர்கோன் செய்தான். (1077)

**6. கச்சியில் வயிரமேகன் :** மன்னவன் தொண்டையர்கோனால் வணங்கப்படுபவனும், நீள் முடி-மாலை உடையவனும் ஆகிய வயிரமேகனது வலிமையும் புகழும் சூழ்ந்த கச்சி மா நகரம். (1127)

**7. பரமேச்சுரன் :** தடங்களும், மாடங்களும், மா மதில்களும் சூழ்ந்து, அழகு ஆய கச்சியில், வெண் குடை நிழலில், செங்கோல் நடத்தியவனும் ; விடை வெல் கொடியும், பாம்புக் கொடியும், வேல் படையும், உயர்த்தியவனும்; கடல்போல் முழங்கும் குரலை உடைய கடுவாய்ப் பறை உடையவனும் ; 'பல்லவன்', 'வில்லவன்' என்று உலகில் பலராய்ப் பல வேந்தரால் வணங்கும் கழலை உடையவனும்— ஆன மல்லையர்கோன், தேர் மன்னு தென்னவனைக் கன்னி மா மதிள் சூழ் கருவூரிலும், வில்லவனை நென்மலியிலும், பிற பகைவர் களை மண்ணையிலும், திசைப்ப, பொருதான். இவன் பணிந்தது பரமேச்சுர விண்ணகரம். (1128-1137)

**8. பல்லவர்கோன் பணிந்த சித்திரகூடம் :** செம் பொன் மணி மாடங்கள் சூழ்ந்த தில்லைத் திருச்சித்திரகூடத்தில் படைமன்னன் பல்லவர்கோன் பைம் பொன்னும், முத்தும், மணியும், கொணர்ந்து பணிந்தான். (1160)

**9. திருநாங்கூர்த் திண் திறலாளர் :** நண்ணார் முனைகளில் மா வரும் திண் படை மன்னர்களை வென்றிகொள்வாரும், துண் என மாற்றார் தம்மைத் தொலைத்தவரும், ஒண் திறல் தென்னன் ஓட, வட அரசு ஓட்டம் கண்டவரும், ஆகிய திண் திறலாளர் மன்னும் சிறப்பை உடையது திருநாங்கை. (1249, 1252, 1293, 1299, 1308)

**10. தொண்டைமன்னவன் மந்திரம் பெறுதல் :** துளங்கு நீள் முடி அரசர்-தம் குரிசிலான திண் திறல் தொண்டை மன்னவன் ஒருவனுக்கு உளம்கொள் அன்பினொடு, இன் அருள் சுரந்து, ஏழு நாழிகை உடன் இருந்து, வளம்கொள் மந்திரம் திருமால் அருளிச் செய்தார். (1426)

**11. நந்திபுர விண்ணகரம் :** வண்டு கிளையோடு மலர் கிண்டி, மது உண்டு, நைவளம் நவிற்றும் மழை தவழ் பொழில் உடையதும், முனியாளர் பண்ணில் மலி கீதமொடு பாடி, ஆடலொடு கூட, மண்ணில் இது போல நகர் இல்லை என வானவர்கள் மலர் தூவி, நண்ணி உறைகின்றதும், நந்தி பணி செய்ததும் ஆன, நகரம் நந்திபுர விண்ணகரம். (1438-1447)

**12. கோச்செங்கணன் :** செழும் பொன்னி வளம்கொடுக்கும் பொன்னி நாடனும் ; களிறு உந்தி, வெண்ணி ஏற்ற விறல் மன்னர் திறல் அழிய, வெம்மா உய்த்து, தெய்வ வாள் வலம்கொண்டு, பகை மன்னர் மணி முடிமேல் காகம் ஏறச் செய்தவனும் ; பார் ஆளர் அவர் இவர் என்று, அழுந்தை ஏற்ற படை மன்னர் உடல் துணிய, பரிமா உய்த்த தேர் ஆளனும்; வேல் ஏந்து விளைந்த வேளை விண் ஏற,

தனி வேல் உய்த்தவனும் ; உலகம் ஆண்டவனும் ; தென் நாடனும்; தென் தமிழனும் ; குடகொங்கனும் ; வட புலக் கோனும்—ஆன திருக்குலத்து வளச் சோழன், இருக்கு இலங்கு திருமொழி வாய் எண்தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து, உலகம் ஆண்டவன், செம் மொழி வாய் நால்வேத வாணர் வாழும் திருநறையூர் மணி மாடம் சேர்ந்து, வழிபட்டான். (1498-1507)

**13. மலையரையன் :** *பொற்புடைய மலையரையன் பணிய நின்ற பூங்கோவலூர்.* (2058)

**14. குணப்பரன் :** *கோனே ! குணப்பரனே !* (2474) ஒப்பிடுக : *கோழியும், கூடலும், கோயில் கொண்ட கோவலரே ஒப்பர்.* (1762)